# நீலாம்பரி

(நாவல்)



கவிச் செல்வர்
திரு. டி. கே. ஷண்முகம்
அவர்களுக்கு
அன்புடன்
—எல்லார்வி
22-10-52

★



"எல்லார்வி"



★

அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை - 18

உரிமை பதிவு
அமுதம்—40
முதற் பதிப்பு: ஏப்ரல்—1952





'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

நேஷனல் ஆர்ட் பிரஸ்
சென்னை—18.

# நீலாம்பரி

## 1. பிரயாணம்

இரவு பத்து மணி. ரோகிணீபுரம் தெற்குத் தெருவில் உள்ள சின்னப் பண்ணை வேதராமன் வீட்டு வாசலுக்கு எதிரில் அழகிய வில் வண்டி ஒன்று பூட்டியபடி நின்றிருந்தது. வண்டியிலே பூட்டியிருந்த மிடுக்கு நிறைந்த மேற்கத்திக் காளைகள் அடிக்கடி பொறுமையை இழந்து தலையை இப்படியும் அப்படியும் ஆட்டுவதும் கால்களைப் பெயர்த்துக் கொடுப்பதும் பெருமூச்சு விடுவதுமாக இருந்தன. நுகத்தடியிலே கழுத்தைக் கொடுத்தபின் அவற்றிற்கு அவ்வாறு நின்று பழக்கம் இல்லை. இன்று அந்த வழக்கத்திற்கு விரோதமாகக் காலதாமதம் ஆகிக் கொண்டிருப்பதை அவற்றால் சகிக்க முடியவில்லை. வண்டிக்காரக் கந்தசாமி அவற்றின் தலைக் கயிற்றைப் பிடித்தபடி முன்னே நின்றிராத பட்சத்தில் அவை வண்டியை இழுத்துக் கொண்டுஇன்னேரம் கண்மண் தெரியாமல்ஓடியேபோயிருக்கும்.

காளைகள் ஒவ்வொரு தடவை தலையை ஆட்டும் போதும் அவற்றின் கழுத்தில் இருந்த சதங்கைகள் "ஜல்ஜல, ஜல்ஜல" என்று ஒலித்து உள்ளே கூடத்திலே அமர்ந்திருந்த வேதராமனின் கவனத்தைக் கவர்ந்து இழுத்துக் கொண்டே இருந்தன. மாடுகளின் அந்நிலையை அவர் என்றுமே சகிக்க மாட்டாராகையால் அடிக்கொருதரம், "உம் உம். நாழிகை ஆகிறது. ரெயில் தவறிவிடப் போகிறது! வாசலில் வண்டி வெகு நேரமாய்ப் பூட்டி நின்று கொண்டிருக்கிறது" என்றெல்லாம் சொல்லி ஊக்கிக் கொண்டே தான் இருந்தார். பக்கத்தில் இருந்த உமாபதியும் அவருடன் சேர்ந்து முடுக்கிக் கொண்டே தான் இருந்தார். ஆனாலும் பெண்மணிகள் பொழுதைக் கழித்துக் கொண்டுதான் இருந்தனர். காலை முதற்கொண்டு பிரயாண முஸ்தீபுகள் நடைபெற்று, மாலைக்குள் சாமான்கள் அனைத்தும் கட்டித் தயாராகி, இரவு எட்டு மணிக்கே எல்லோரும் சாப்பிட்டு முடிந்தும் புறப்பாட்டுக்குத் தாமசம் ஆகிக்

கொண்டுதான் இருந்தது. அப்படி என்ன காரியம்? ஒன்றுமே இல்லை. ஸ்திரீகள் வளைத்து வளைத்து, கூடிக் கூடி என்னவோ பேசிக் கொண்டே இருந்தார்கள். கடைசியில் வேதராமன் பொறுமையை இழந்து, "என்ன இது? பிரயாணம் இன்றைக்கு இல்லையா? வண்டியைப் பூட்டவிழ்த்துவிடச் சொல்லட்டுமா?" என்று சத்தம் போட்ட பிறகுதான் அவர்களுக்கு உறைத்தது.

"உம் உம். கிளம்பு நீலா" என்றாள் சீதாலட்சுமி.

"நான் போய் வரட்டுமா அம்மா?" என்றாள் நீலா.

"போய் விட்டு வா. சமத்தாய் இரு. நல்ல பெயர் எடு. அடிக்கடி கடிதாசு போடு" என்றாள் யோகாம்பாள்.

எல்லோரும் மெல்ல நடந்து வாசற்புறம் வந்தார்கள். நீலாவும் சீதாலட்சுமியும் வண்டியிலே ஏறி அமர்ந்ததும் உமாபதி தம் கையில் இருந்த வீணையை ஜாக்கிரதையாக நீலாவிடம் கொடுத்துவிட்டு, "நான் வருகிறேன், யோகம். நீலாவைப்பற்றிக் கவலைப்படாதே. சீதாலட்சுமி அவளை உன்னைவிட நன்றாகப் பார்த்துக் கொள்வாள். பட்டணம் போய்வருவது இப்போது முன்போலெல்லாம் இல்லை. நினைத்தால் வரலாம், போகலாம். பெண்ணை எங்கேயோ காட்டுப் பிரதேசத்திற்கு அனுப்பிவிட்ட தாக நினைத்து உருகிப் போய்விடாதே. கேசவனைத் திருத்தி வழிக்குக் கொண்டுவா. உடம்பைக் கவனித்துக்கொள். நான் வரட்டுமா அத்திம்பேரே?" என்று சொல்லிக் கொண்டே வண்டியில் ஏறி அமர்ந்தார். கந்தசாமியும் தன் ஆசனத்தில் அமர்ந்தான். அவன் உட்கார்ந்ததுதான் தாமசம், காளைகள் விருக்கென்று கிளம்பி விட்டன. நாலு கால்ப் பாய்ச்சலில் நாலே எட்டில் தெருவைக் கடந்துவிட்டன. இருட்டிலே வண்டி கண்ணுக்குப் புலப்படவில்லை. சற்று நேரத்தில் மாட்டுச் சதங்கை ஒலியும் தேய்ந்து மறைந்தது.

கையிலே பிடித்துக் கொண்டிருந்த விளக்கைத் திண்ணையிலே வைக்கக்கூடத் தோன்றாமல் நின்றிருந்தார் வேதராமன். தாம் அப்படிப் பிரமை பிடித்தாற் போல் நின்றிருந்ததை மறந்துவிட்டு அசப்பிலே மனைவியைப் பார்த்தவர் அவள் முன்றானையால் கண்ணைத் துடைத்துக் கொள்வதைக் கண்டு, "ஏதுக்கு யோகம் வருத்தப்படுகிறாய்? குழந்தை எங்கே போகிறாள் இப்போது? மாமாவிடந்தானே? உன் உடன் பிறந்தானிடந் தானே? சீதாலட்சுமியும் உமாபதியும் அவள் பேரில் எத்தனை அன்பு வைத்திருக்கிறார்கள் என்பது தெரியாத விஷயமா? பாவம், பகவான் அவர்களைச் சோதனை செய்கிறான். ஏதோ இந்தக் குழந்தையின் முகத்திலாவது ஆறலாம் என்கிற எண்ணம்.

போய் இருக்கட்டுமே, குழந்தை" என்று அதட்டலில் ஆரம்பித்து ஆறுதலில் முடித்தார். அவளைச் சமாதானம் செய்வதாக அவர் மனத்தில் எண்ணம். ஆனால் அவர் குரலில் தோன்றிய தழுதழுப்பைப் பார்த்தால் அவருக்குத்தான் நாலு பேர் ஆறுதல் சொல்ல வேண்டும் என்று தோன்றிற்று.

யோகம் உட்புறம் திரும்பி மெல்ல நடந்தாள். வேதராமனும் பின் தொடர்ந்தார். தூங்கிக் கொண்டிருந்த கேசவன் என்னவோ உளறிக்கொண்டே புரண்டு படுத்தான். பிறகு விழித்துக்கொண்டு, "அம்மா!" என்றான். சீதாலட்சுமி அருகில் சென்றதும், "நீலா, மாமா, மாமி எல்லாரும் ஊருக்குப் போயிட்டாளா அம்மா?" என்று ஆதங்கத்தோடு கேட்டான்.

"இப்போதுதான் அப்பா கிளம்பிப் போனார்கள். உன்னை எழுப்பி எழுப்பிப் பார்த்தார்கள். அசந்து தூங்கினாய். எழுப்ப மனசில்லாமல் போய்விட்டார்கள்" என்றார் வேதராமன்.

கேசவனுக்குத் தூக்கம் நன்றாகத் தெளிந்துவிட்டது. எழுந்து உட்கார்ந்து கொண்டான். சீதாலட்சுமி உள்ளே போய்ப் பாலை எடுத்து ஆற்றிக்கொண்டு வந்து அவனுக்குக் கொடுத்துக் கொண்டே வேதராமனிடம் சொன்னாள்.

"நீங்கள் ஆயிரந்தான் சொல்லுங்கள்; பிறந்தது முதல் பிரியாமல் இருந்த குழந்தையைப் பிரிந்து இருப்பது என்பது எனக்கு என்னவோ போலத்தான் இருக்கிறது."

வேதராமன் விரக்தி தோன்றச் சிரித்தார்.

"இன்னும் எத்தனை காலத்திற்கு அவளைப்பற்றி இப்படிச் சொல்லிக் கொண்டிருக்க முடியும் யோகம்? பெண்ணாய்ப் பிறந்தவள் என்றாவது ஒரு நாள் இன்னொருவர் வீட்டுக்குப் போய்ச் சேர வேண்டியவள் தானே?"

"அப்படி நேருகிறபோது நேரட்டும். அதற்காக இப்போதே பிடித்துப் பிரிய வேண்டும் என்று என்ன தலை விதி?"

"நீ என்ன யோகம் இப்படிப் பேசுகிறாய்? உன் தம்பி தானே அழைத்துக் கொண்டு போகிறான்? நமக்காவது பகவான் ஏதோ இரண்டு குழந்தைகளைக் கொடுத்தான். பாவம், அவன் விஷயம் மகா கண்ணராவி இல்லையா?"

"வாஸ்தவந்தான். உங்களைவிட எனக்கு அந்த வேதனை அசாத்தியமாகத்தான் இருக்கிறது. குழந்தையை அவன் அழைத்துப் போனதிலும் ஆட்சேபணை இல்லை. ஆனால் படிக்க வைக்கப் போகிறேன் என்றானே, அதுதான்..."

"ஏன்? அதிலே உனக்கு என்ன ஆட்சேபணை?"

"வெறுமனே இருந்தால் நினைத்தால் வரலாம், போகலாம். பள்ளிக்கூடத்திலே சேர்ந்துவிட்டால் அப்படி முடியுமா?"

"இது என்ன பிரமாதம்? குழந்தை இங்கே வர முடியாவிட்டால் நாம் அங்கே போய் அடிக்கடி பார்த்து வருகிறது."

"உங்களுக்கே அவளைப் படிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை. உமாபதி உதட்டை அசைத்ததும் சரி என்று சொல்லிவிட்டீர்கள்."

"ஆமாம். சில பெண்களைப் போல் மக்காக இருந்தால் யார் அதைப்பற்றி நினைக்கப் போகிறார்கள்? படிப்பு, பாட்டு எல்லாம் அவளுக்கு நன்றாக வருகின்றன. தெய்வமும் இன்று நம்மைத் தரித்திர நிலையில் வைக்கவில்லை. அவளுக்கும் ஆசை நிறைய இருக்கிறது. படிக்கிறவரையிலே படிக்கட்டுமே. அங்கே உமாபதிக்கு மிகவும் வேண்டிய வீணை வித்துவான் ஒருவரும் பக்கத்துத் தெருவிலே இருக்கிறாராம்........"

"உங்கள் திட்டத்தைப் பார்த்தால் பெண்ணுக்கு இப்போதைக்குக் கல்யாணம் செய்வதாக உத்தேசம் இல்லைபோல் இருக்கிறதே! அவளுக்கு இப்போதுதான் ஐந்து வயசு நிரம்பியிருக்கிறது என்ற எண்ணம் போல் இருக்கிறது உங்களுக்கு."

"நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? பெண்ணுக்கு இருபது வயசு ஆகிவிட்டது என்று உன் நினைப்போ? போடி பைத்தியக்காரி. குழந்தைக்கு விடிய விடிய இன்னும் பதினாலு வயசு பூர்த்தியாகவில்லையாம்; அதற்குள் பிரமாதப் படுத்துகிறாள், கல்யாணத்தைப்பற்றி. இதுதான் வடிகட்டின கிராமாந்தரம் என்பது. பட்டண வாசத்திலே போய்ப் பார்."

"சரி சரி. உங்கள் இஷ்டம். அத்திம்பேரும் மைத்துனனுமாகக் கூடிப் பேசிக் காரியங்களைச் செய்கிறீர்கள். போதாக்குறைக்குச் சீதாலட்சுமியும் உங்களுக்குப் பக்க பலம். நான் மட்டும் தனியாகப் புலம்பிக் கொண்டிருப்பதிலே என்ன பிரயோசனம்? நடக்கிறபடி நடக்கட்டும்... ஆனால் ஒன்று; பள்ளிக்கூடத்திலே எப்போது லீவு விட்டாலும் உடனே நீலா இங்கே வந்து சேர வேண்டும்; அவ்வளவுதான் நான் சொல்வேன்."

"சரி, அப்படியே ஆகட்டும்."

அந்த அளவிலே யோகம் மனச் சமாதானம் பெற்றாள். வேதராமன் வாசலுக்குச் சென்று அங்கே கிடந்த சாய்வு நாற்காலியிலே படுத்தார். அவர் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது.

* * *

ரோகிணிபுரம் ஒருகாலத்தில் மிகச் செழிப்புடன் இருந்தது. ஊரில் நாலு தெருக்கள். ஒவ்வொரு தெருவிலும் இரு சாரிகளி லும் இடைவெளி இல்லாமல் வீடுகள். இரண்டு குடும்பங்களைத் தவிர ஏனையோர் நடுத்தர அந்தஸ்தில் உடையவர்கள். அப்படிப் பட்ட குடும்பங்களுள் ஒன்றைச் சேர்ந்தவர்தாம் வேதராமன்.

காலக் கிரமத்தில் எங்கும் வியாபித்த துர்ப்பிட்சம் ரோகி ணிபுரத்தையும் பாதித்தது. பல குடும்பங்கள் செயல் குறைந்து க்ஷிணதசையை அடைந்து ஊரைவிட்டு வெளியேறின. வீடுகள் பாழ்த்தன; இடிந்தன; தரைமட்டமாயின. இடைவெளி இல் லாதபடி வீடுகள் நிறைந்திருந்த தெருக்கள் பாழ் மனையால் நிறைந்தன. சுமார் அறுபது வீடுகள் இருந்த இடத்திலே இருபது வீடுகளே எஞ்சின.

வேதராமனும் ஊரை விட்டுக் கிளம்பினவர்கள் வரிசை யிலே சேர்ந்திருக்க வேண்டியவர்தாம். ஆனால் அதிருஷ்ட தேவதை யோகாம்பாளின் ரூபத்திலே வந்து அவரை அடைந்து அந்த நிலையை மாற்றி அமைக்கவே சில வருஷங்களுள் அவரே ஊரில் பெரிய மனிதராக ஆய்விட்டார்.

அப்போது உமாபதியின் குடும்பமும் சாமான்ய நிலையிலே இருந்ததால் அவர் சகோதரி யோகத்திற்கும் வேதராமனுக்கும் கல்யாணம் நடந்தது. உமாபதியைப் படிக்க வைக்கவும் யோகத்திற்குக் கல்யாணம் செய்யவும் மிகவும் பிரயாசைப்பட்ட அவர்கள் பெற்றோர் பின்னாளில் பெண்ணும் பிள்ளையும் செய லில் வாழ்வதைக் காணக் கொடுத்து வைக்கவில்லை.

கல்யாணம் ஆன மறு வருஷத்திலே வேதராமன் வியாபாரத்திலே ஈடுபட்டார். மளமளவென்று லாபத்தின் மேல் லாபமாகச் சேர்ந்தது. விரைவில் பணக்காரரான அவர் ஊரில் ஏராளமான நிலபுலன்களுக்கும் வீடுகளுக்கும் உரியவர் ஆனார். ஏற்கனவே ஊரில் பரம்பரைப் பணக்காரர்களாக இருந்து வந்த இருவரும் பொறாமையால் வெந்து கொண்டிருந்தனர். 'திடீரென்று ஒருநாள் வியாபாரம் தலைகுப்புற விழ வேண்டும்; வேதராமனின் அகம்பாவம் அழிய வேண்டும்' என்று அவர்கள் எப்போதும் பிரார்த்தனை செய்த வண்ணம் இருந்தனர். வேத ராமன் அகம்பாவத்துடன் இருப்பதாக அவர்கள் எண்ணிக் கொண்டார்களே தவிர உண்மையில் அவரிடம் அப்படிப்பட்ட குறை எதுவுமே இல்லை. சுருக்கமாகச் சொன்னால் நற்குணங் களின் இருப்பிடம் அவர். ஆகவே சுற்று வட்டாரங்களில் வெகுதூரம் வரைக்கும் அவர் செல்வாக்கு ஓங்கி வளர்ந்தது.

வெகுநாட்கள் கழித்து நீலா பிறந்தாள். அப்புறம் ஆறு வருஷங் கழித்துக் கேசவன் பிறந்தான். 'எல்லாவற்றிலும்

சவரணை ; இந்த விஷயத்திலும் சவரணை' என்று ஊர்ப் பெண்டுகள் பேசிக் கொண்டார்கள்.

நீலா அதி புத்திசாலியாக இருந்தாள். அதனால் அவள் அழகும் செல்வ நிலையும் பன்மடங்காகச் சோபித்தன. உள்ளூரில் ஐந்து வகுப்புகள் வரையிலேதான் படிக்க வசதி. அதற்கு மேல் அடுத்தாற்போலிருந்த சிறு நகரத்திற்கு வண்டியிலே போய்ப் படித்து வந்தாள் நீலா. அங்கும் எட்டாவது வகுப்புக்கு மேல் படிக்க வசதி இல்லை. வேதராமனுக்கு அவளை மேலும் படிக்க வைக்க வேண்டும் என்ற அவா. வருஷத்திற்கு ஒரு தடவை சென்னையிலிருந்து வந்து போய்க்கொண்டிருந்த உமாபதியும் நீலா மேலும் படிக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கொண்டே இருந்தார். தாம் அழைத்துப் போய்ப் படிப்பும் பாட்டும் கற்பிப்பதாகவும் சொல்லிக் கொண்டிருந்தார். யோகம் லேசில் அதற்கு இணங்கவில்லை. கடைசியில் இம்முறை லீவில் வந்திருந்தபோது இதைப்பற்றித் தீவிரமாகச் சகோதரியுடன் வாதாடித் தம் பிடிவாதத்தை நிறைவேற்றிக் கொண்டார். நீலா, வேதராமன் இருவரும் எடுப்பிலேயே பரிபூரணமான சம்மதத்தைக் கொடுத்து விட்டதால் உமாபதியின் வாதம் ஓங்கிற்று; யோகத்தின் கட்சி பலவீனமடைந்தது.

* * *

இரவு ஒரு மணிக்கு ரெயில். கிராமத்திலிருந்து நாலு மைலில் ஸ்டேஷன். காளைகள் இமைப் பொழுதில் வண்டியை ஸ்டேஷனில் கொண்டு வந்து நிறுத்திவிட்டன. நீலா சென்னை செல்வதிலே அவைகளுக்கே அவ்வளவு உற்சாகம் என்று நினைக்கும்படி இருந்தது அந்தச் செயல். ஆம், 'பட்டணம் போக வேண்டும் ; அவ்விடத்து நாகரிகங்களைக் காண வேண்டும் ; அவற்றில் நல்லவற்றைக் கொள்ள வேண்டும்; கெட்டவற்றைத் தள்ள வெண்டும்; நிரம்பப் படிக்க வேண்டும்; பாட்டும் வீணையும் சொல்லிக்கொள்ள வேண்டும்' என்றெல்லாம் வெகு நாட்களாக ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாள் நீலா. பிள்ளையில்லாக் குறை தீரச் சகோதரியின் பெண்ணைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டு வளர்க்கவேண்டும் என்று ஆசைப்பட்டார் புரொபஸர் உமாபதி. அழகு, அறிவு, குணம், ஒட்டிப் பழகும் சுபாவம் முதலியன நிறைந்த நீலாவைக் கணமும் பிரியாமல் இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாள் சீதாலட்சுமி. இப்படி மனசிலே கொள்ளை ஆசையை உடைய மூவரைச் சுமந்து செல்லும் பேறு கிடைத்திருப்பதை அந்தக் காளைகளும் உணர்ந்து மகிழ்ந்தனவோ என்றுதான் எண்ண வேண்டி இருந்தது.

ஸ்டேஷனை அடைந்த உமாபதி முதற் காரியமாகச் சென்னையில் உள்ள அவருடைய மாணுக்கன் சுகுமாரனுக்கு ஒரு தந்தியைக் கொடுத்தார். அடுத்தபடியாகச் சென்னை எழும்பூருக்கு இரண்டு டிக்கட்டுகளும் கும்பகோணத்திற்கு ஒரு டிக்கட்டும் வாங்கினுர். கந்தசாமிக்கு இனும் கொடுத்து அனுப்பி விட்டுப் போர்ட்டர்கள் தலையிலே சாமான்களை ஏற்றிக்கொண்டு நீலா, சீதாலட்சுமி இவர்களுடன் பிளாட்பாரத்தை அடைந்தார்.

ஒரு மணிக்குச் சென்னை செல்லும் ரெயில் வந்தது. உமாபதி சீதாலட்சுமியையும் நீலாவையும் அதில் ஏற்றிவிட்டார். “குழந்தையை ஜாக்கிரதையாக அழைத்துக்கொண்டு போ சீதாலட்சுமி. சுகுமாரனுக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன். அநேகமாக ஸ்டேஷனுக்கு வந்திருப்பான். அப்படி வராவிட்டால் ஒரு டாக்ஸியை வைத்துக்கொண்டு வீட்டுக்குப் போய்ச் சேருங்கள். நான் கிராமத்துக் காரியங்களை இரண்டே நாளில் முடித்துக் கொண்டு வந்து சேருகிறேன்” என்றுர். செலவுக்குத் தேவையான பணத்தை அவளிடம் முன்பே கொடுத்திருந்தார். அவர் கும்பகோணம் போய்விட்டு அப்புறம் வரப்போகிற விஷயம் முன்னமேயே பேசித் தீர்மானித்ததாகையால் சீதாலட்சுமி தன்னையும் நீலாவையும் பற்றிக் கவலைப்பட வேண்டாமென்றும், அவரைக் கிராம அலுவல்களை விரைவில் முடித்துக் கொண்டு, அலைந்து திரிந்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளாமல் விரைவில் பட்டணம் வந்து சேரும்படிக்கும் கூறினுள். ரெயில் நகர்ந்தது. நீலா ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து, “போய் வருகிறேன் மாமா” என்றுள். உமாபதி சிரித்துக்கொண்டே, “இதோ, பின்னேடு நானும் இரண்டுநாளில் வந்து சேருகிறேன், போ” என்றுர். ரெயில் வேகமாக ஓட ஆரம்பித்தது.

ஏதோ பெரிய காரியத்தைச் சாதித்துவிட்ட மனேபாவத்துடன் பிளாட்பாரத்தில் தப்படி போட்டு உலாவிக் கொண்டிருந்தார் உமாபதி. நீலாவின் வருங்காலம் பற்றி அவர் உள்ளத்திலே ஏதேதோ பிரமாதமான திட்டங்கள் எழுந்து வளர்ந்து கொண்டே இருந்தன. அவற்றிலே மனத்தை லயிக்கவிட்டபடி உலாவிக் கொண்டிருந்த அவர் சிந்தனையை, “வண்டி வந்துவிட்டது, வண்டி வந்துவிட்டது” என்ற ஜனங்களின் ஆரவாரம் கலைத்தது. பின்னுல் திரும்பிப் பார்த்தார். வேகமாக வந்து கொண்டிருந்த ரெயிலின் இன்ஜின் லைட்டு ஒளி கண்ணைக் கூசச் செய்தது. சற்றைக்கெல்லாம் ரெயில் பேரிரைச்சலுடன் வந்து நின்றது. உமாபதி அதில் ஏறிக் கும்பகோணத்திற்குப் பிரயாணமானுர்.

# 2. அறிமுகம்

பொழுது புலர்ந்தது. திருவனந்தபுரம் பாஸெஞ்சர் சென்னை எழும்பூர் ஸ்டேஷனை அடைந்து நின்றது. ஜனங்களின் ஆரவாரமும் போர்ட்டர்களின் கூச்சலும் குழந்தைகளின் கூக்குரலும் அமளிப்பட்டன. தாம்பரம் ஸ்டேஷனிலேயே விழித்து எழுந்து உட்கார்ந்திருந்த சீதாலட்சுமி, தொட்டில் ஆட்டத்தின் சுகத்தைப்பெற்ற குழந்தையின் நிலையில் அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்து கிடந்த நீலாவை எழுப்ப மனமின்றியே அதுவரை பொழுதைக் கழித்து வந்தாள். இனி எழுப்பித்தான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டதும் அருகில் சென்று, "நீலா, நீலா" என்று தட்டி எழுப்பினாள். திடுக்கிட்டுக் கண் விழித்த நீலா ஒன்றும் புரியாமல், "ஏன் மாமீ?" என்று கேட்டு விட்டு மலங்க மலங்க விழித்தாள்.

சீதாலட்சுமி சிரித்துக்கொண்டே, "என்ன ஏன் மாமீ? எழுந்திரம்மா. இறங்க வேண்டாமா?" என்றாள்.

"எழும்பூர் வந்தாச்சா?" என்று கேட்டுக்கொண்டே எழுந்த நீலா சூழ்நிலையை ஒருமுறை நோட்டமிட்டு விட்டுச் சட்டென்று கைப் பெட்டியைத் திறந்து சீப்பு, கண்ணாடி முதலியவற்றை எடுத்தாள்.

"இத்தனை நாழிகை தூங்கி விட்டு ,இப்போது போய் அலங்காரம் செய்துகொள்ள ஆரம்பிக்கிறாயே நீலா? வீட்டிலே போய் எல்லாம் பார்த்துக் கொள்ளலாமே."

"அலங்காரம் ஒன்றும் இல்லை மாமி. வெறுமனே தலையை மட்டும் வாரிக் கொள்கிறேன். ஓவென்று பறந்து கொண்டிருந்தால் விகாரமாக இராதா? பட்டண வாசத்திலே அப்படியெல்லாம் இருக்கலாமா? இங்கே உங்களுக்குத் தெரிந்தவர்கள் பலபேர் இருப்பார்கள். அவர்கள், 'புரொபஸர் மருமாளைப் பார்' என்று பரிகாசம் செய்யமாட்டார்களா?" என்று சிரித்துக் கொண்டே சொல்லியபடி காரியத்திலே கண்ணாக இருந்தாள் நீலா. அவள் கிராமத்துப் பெண்ணானாலும் அரை பறக்காமல் தலை பறக்காமல் நாகரிகமாகத் தன்னைச் சிங்காரித்துக் கொள்வதிலே என்றும் கருத்து உடையவள்.

இவளோடு பேசிச் சமாளிக்க முடியாது என்று முடிவு கொண்ட சீதாலட்சுமி சுகுமாரன் வந்திருக்கிறானா என்று பார்க்க ஜன்னல் ஓரம் சென்றாள். அதே சமயத்தில், "மாமீ!" என்று குரல் கொடுத்துக்கொண்டே ஜன்னல் அருகே வந்து

நின்ருன் சுகுமாரன். அவனைக் கண்ட சீதாலட்சுமிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. முகமலர்ச்சியுடன், "வந்துவிட்டாயா சுகுமாரா? நீ வருகிருயோ இல்லையோ என்று கவலைப்பட்டுக் கொண்டே இருந்தேன். எப்போது நீ ஊரிலிருந்து வந்தாய்?" என்ருள்.

சுகுமாரன் அவள் கேள்விக்கு ஒன்றும் பதிற் சொல்ல வில்லை. அவன் கண்ணும் கருத்தும் மின்னல் கொடிபோல் நின்றிருந்த நீலாவின் மீது பதிந்திருந்தன. 'இப்படியும் ஓர் அழகுருவம் உலகில் உண்டோ!' என்று வியந்தது அவன் உள்ளம்.

சீதாலட்சுமி, 'வந்துவிட்டாயா சுகுமாரா?' என்றதுமே அந்தப் பக்கம் திரும்பி நின்று தலைவாரிக் கொண்டிருந்த நீலா சட்டென்று இந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தாள். விழுங்கிவிடுகிருற்போலத் தன்னையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த சுகுமாரனைக் கண்டதும் லஜ்ஜை யுடன் மறுபுறம் திரும்பிக் கொண்டாள். தலை வாரி, நெற்றி யில் திலகமிட்டுக் கொண்டு கண்ணுடி, சீப்பு முதலியவற்றைப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு மறுபடியும் இந்தப் பக்கம் திரும்பினபோதும் அவன் முன் போலவே தன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் அவளுக்கு என்னவோபோல் இருந்தது. சட்டென்று தலையைக் குனிந்து கொண்டாள். இருந் தாலும் கண்கள் கீழ்நோக்காக அவனைக் கவனிக்கத்தான் செய் தன. 'அடேயப்பா! இவர்தான் எவ்வளவு அழகாக இருக்கிருர்! ஏதுக்கு என்னை இப்படிக் கண் கொட்டாமல் பார்க்கிருர்?' என்று எண்ணமிட்டது அவள் உள்ளம்.

"என்ன சுகுமாரா, கேட்ட கேள்விக்குப் பதில் கூடச் சொல்லாமல், என்னை ஒரு பொருட்டாகக்கூட மதிக்காமல் அவளை அப்படிப் பார்க்கிருயே!" என்ருள் சீதாலட்சுமி.

சுகுமாரனுக்கு அந்த இடத்திலேயே நாக்கைப் பிடுங்கிக் கொண்டு விடலாமா என்று இருந்தது. 'அதி புத்திசாலி, மகா யோக்கியன்' என்றெல்லாம் பல தடவை புகழ்ந்த சீதா லட்சுமியின் வாயிலிருந்தே இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்டதும் அவனுக்கு ஒருகணம் மூச்சோட்டமே நின்று போனது போல் இருந்தது. "இல்லை மாமி...வந்து..." என்று ஏதோ சொல்லிக் கொண்டே சீதாலட்சுமியை நோக்கினுன். அவள் முகத்திலே பரிகாசச் சிரிப்பைக் கண்டான். மனம் சற்றே நிம்மதிப்பட்டது. தைரியமும் ஏற்பட்டது. "......யார் என்று...தெரியவில்லை...பார்த்தேன்" என்று, ஆரம்பித்த வார்த்தைகளை ஒருவாறு முடித்தான்.

"இவள்தான் என் மருமாள் நீலா. அடிக்கடி நானும் மாமாவும் பேசிக் கொண்டிருப்போமே? உன்னிடங் கூடப் பல தடவை இவளைப் பற்றிச் சொல்லியிருக்கிறேனே!" என்று பெருமிதத்தோடு சொன்ன சீதாலட்சுமி நீலாவின் பக்கம் திரும்பி, "நீலா, இவன் தான் சுகுமாரன்" என்றாள். 'கர்நாடகத்திற்கும் புதுநாடகத்திற்கும் இடையே வளையவரும் மாமிக்கு அறிமுகம் செய்து வைக்கும் நாகரிகமும் தெரிந்திருக்கிறதே!' என்று நீலா, சுகுமாரன் இருவருமே எண்ணிக் கொண்டார்கள்.

"இப்படியே நின்று கொண்டிருந்தால்? போர்ட்டரைக் கூப்பிடேன்" என்றாள் சீதாலட்சுமி. சுகுமாரனுக்கு அதன் பிறகுதான் மூளை இயங்கத் தொடங்கிற்று. போர்ட்டர் திட்டம் செய்து சாமான்களை வண்டியிலிருந்து இறக்கினான். நீலாவும் சீதாலட்சுமியும் இறங்கினார்கள். போர்ட்டர் முன்னே சென்றான். சுகுமாரன் அவன் பின்னே சென்றான். சீதாலட்சுமியும் நீலாவும் அவனைப் பின் தொடர்ந்தனர். சுகுமாரனை நேருக்கு நேராகப் பார்க்க லஜ்ஜைப்பட்ட நீலா இப்போது அவன் பின்னழகையும் கம்பீரமான நடையழகையும் பார்த்துப் பார்த்து ரசித்தாள். அந்த வாய்ப்புச் சுகுமாரனுக்குக் கிடைக்காததால் பாவம், அவன் காரணமின்றி அடிக்கடி பின்புறம் திரும்பித் திரும்பிப் பாத்துக் கழுத்தை நோவெடுக்கச் செய்து கொள்ள வேண்டி இருந்தது.

எல்லோரும் டாக்ஸியில் ஏறி அமர்ந்தார்கள். சீதாலட்சுமி, நீலா இருவரும் பின் சீட்டில் உட்கார்ந்தார்கள். சுகுமாரன் டிரைவரின் பக்கத்தில் அமர்ந்தான். 'இருக்கட்டும். அதனால் பரவாயில்லை. ஒரே காருக்குள் மிகமிகச் சமீபத்தில்தானே இருக்கிறோம்? எப்படியும் மாமி ஏதாவது பேச்சுக் கொடுப்பாள். அந்த வியாஜத்திலே பின்புறம் திரும்பலாம். அப்படி அவள் ஏதும் பேச்சுக் கொடுக்காவிட்டால் நாமாக ஏதாவது பேசிச் சந்தர்ப்பத்தை உண்டு பண்ணிக் கொண்டால் போயிற்று' என்று மனோராஜ்யம் செய்தான் அவன். டாக்ஸி புறப்பட்டது.

"மறுபடியும் கேட்கிறேன் சுகுமாரா; நீ எப்போது ஊரிலிருந்து வந்தாய்?"

"இதற்கு முன் ஒரு தரம் கேட்டீர்களா?"

"அப்போதுதான் உனக்கு இந்த உலகத்து ஸ்மரணையே இல்லையே! அது கிடக்கட்டும்; இப்போது சொல்."

சுகுமாரனை வெட்கம் பிடுங்கித் தின்றது. அசட்டுச் சிரிப்புடன் நீலாவைப் பார்த்தான். அவள் இதழ்க் கடையில் ஒரு சிறு புன்னகை நெளிந்தோடிற்று.

"நான் வந்து நாலு நாளாகிறது மாமி."

"இந்தக் கூத்தைக் கேள். உனக்குத் தந்தி கொடுத்திருக்கிறேன் என்று மாமா சொன்னார். அப்போது, 'சுகுமாரன் ஊரிலிருந்து வந்திருப்பானோ?' என்று கேட்கத் தோன்றுதோ ஒரு பொம்மனாட்டிக்கு?"

"அப்போது உங்களுக்கு இந்த உலகத்து ஸ்மரணையே இருந்திராது!"

சட்டென்று தலை நிமிர்ந்து அவனைப் பார்த்தாள் நீலா. 'என்ன துணிச்சல்!' என்று மனசில் நினைத்துக் கொண்டாள். ஆச்சரியத்தைத் தோற்றுவித்த அவளுடைய அகன்ற கண்களின் அழகை அவன் இமைக்காமல் ரசித்தான்.

சுகுமாரன் வெடுக்கென்று கேட்ட கேள்வி சீதாலட்சுமிக்கே என்னவோபோல் இருந்தது. இருப்பினும் சமாளித்துக் கொண்டு, "ஊரிலே எல்லாரும் சௌக்கியமா? அம்மா திடமாக இருக்கிறாரா?" என்று கேட்டாள்.

"எல்லாரும் சௌக்கியந்தான். அம்மாதான் மிகவும் தள்ளாமையோடு இருக்கிறாள்" என்றான் அவன்.

"பாவம், வயசாகி விட்டதல்லவா?"

"வயசான தளர்ச்சியோடு மட்டும் இருந்தால் பரவாயில்லை......"

"இன்னும் என்ன?"

"வேறே என்ன? எப்போதும் உள்ள குறைதான். நான் போனது முதல் ஒரே ராமாயணந்தான்; உபதேசந்தான்; பழைய பல்லவிதான். எல்லாம் உங்களுக்குத் தெரிந்த விஷயந்தான். புதிதாக ஒன்றும் இல்லை."

"ஆமாம் சுகுமாரா, நானுந்தான் கேட்கிறேன்; தள்ளாத வயசிலே அம்மாவின் மனசை ஏதுக்கு இப்படிக் கஷ்டப் படுத்துகிறாய்? காலா காலத்திலே......"

"ஆரம்பித்து விட்டீர்களா நீங்களும்? அம்மாவுக்குத்தான் வேலை என்ன; உங்களுக்குத்தான் வேலை என்ன? அதெல்லாம் இன்னும் நாலுவருஷத்திற்கு..."

"அசட்டுப் பிசட்டென்று உளறாதே சுகு. நாலு வருஷத்தைக் கண்டவர்கள் யார், நம்மைக் கண்டவர்கள் யார்? பேசாமல் பெரியவர்கள் சொல்வதைக் கேட்டு..."

"படிப்பைக் குட்டிச் சுவராக்கிக்கொள் என்கிறீர்களா?"

"கல்யாணம் பண்ணிக்கொண்டால் படிப்புக் குட்டிச்சுவராகி விடும் என்று எந்தப் புத்திசாலி உனக்கு உபதேசம் செய்தது?"

"ஒருவர் சொல்வானேன் மாமி? எனக்கே தெரியும். மனசுக்குப் பிடித்த பெண்ணாகக் கிடைத்து விட்டால் படிப்பை மறந்து சதா அந்தப் பெண்ணையே சுற்றிச் சுற்றி அலைந்து கொண்டிருக்கத் தோன்றும்; பிடிக்காத பெண்ணாக அமைந்து விட்டாலோ அந்த வேதனையே மனசைக் கொன்று கொண்டிருக்கும். ஆக எந்த வகையிலும் கல்யாணத்தினால் படிப்பு நாசந் தான். ராஜதானியிலேயே முதல்வன் என்று பெயரெடுத்தவன் முடிந்த வரையிலே படிப்பது நல்லது இல்லையா?"

இடையிடையே கடைக் கண்ணால் நீலாவைப் பார்த்தபடி குட்டிப் பிரசங்கஞ் செய்த சுகுமாரன் எதை முன்னிட்டு அப் படிப் பேசினானோ அதில் வெற்றி பெற்றான். அவள் அவன் நிலையை ஒருவாறு புரிந்து கொண்டாள். அதனால் அவள் உள் ளத்திலே தோன்றிய நிறைவும் மகிழ்ச்சியும் கண்களிலே பிரதி பலித்தன.

டாக்ஸி பல பெரிய ரஸ்தாக்களையும் திருப்பங்களையுங் கடந்து போய்க் கொண்டே இருந்தது. எந்த இடத்திலே வண்டி போய்க் கொண்டிருக்கிறது என்பதை உணராத நிலை யிலே இருந்த சுகுமாரனிடம், "எந்தத் தெரு ஸார்?" என்று டிரைவர் கேட்டதும் அவன் வியப்புடன், "அட! இதற்குள் மயிலாப்பூர் வந்து விட்டோமா?" என்றான். டிரைவர் லேசாகச் சிரித்தான். சுகுமாரனின் நிலையை அவன் கூட உணர்ந்து கொண்டிருப்பது போன்று இருந்தது அந்தச் சிரிப்பு.

சுகுமாரன் டிரைவரிடம் தெருவின் பெயரையும் செல்ல வேண்டிய மார்க்கத்தையும் கூறிவிட்டுச் சீதாலட்சுமியிடம், "மாமா எப்போது வருவார்?" என்று கேட்டான்.

"இரண்டு நாளில் வந்து விடுவார். குழந்தையை அழைத்து வராவிட்டால் நானுங்கூட அவரோடு குமாரபுரம் போய் விட் டுத்தான் வந்திருப்பேன்" என்றாள் அவள்.

"குழந்தையா?...யார் அது?......"

"இவளைத்தான் சொல்கிறேன்—நீலாவை."

சுகுமாரன், "ஓகோ?..." என்று சொல்லிவிட்டுக் கபட்டுச் சிரிப்புடன் சட்டென்று நீலாவைப் பார்த்தான். சீதாலட்சுமி யோடு அவன் பேசிக் கொண்டிருக்கையில் அவன் முகத்தையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்த நீலா சட்டென்று அவன் தன் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்ததும் நாணத் துடன் தலை கவிழ்ந்தாள்.

"இதிலே சிரிப்பதற்கு என்ன இருக்கிறது சுகுமாரா? சின்னவர்கள் எல்லாருமே பெரியவர்களுக்குக் குழைந்தைகள் தாமே? அதிலும் இந்தத் தங்கம் எங்கள் செல்லம். நாங்கள் இவளைக் குழந்தை என்றுதான் கூப்பிடுவது."

சுகுமாரன் பரிகாசத்துடன் உதட்டைப் பிதுக்கிப் புருவத்தைச் சுளித்தான். அதைக்கண்டு நீலா கோபித்துக் கொண்டவள் போல முகத்தை வைத்துக் கொண்டாள்.

"எந்த வீடு ஸார்?..."

சுகுமாரன் முன்புறம் திரும்பி டிரைவருக்கு வீட்டைச் சுட்டிக் காட்டினான். வண்டி அந்த வீட்டின் எதிரே சென்று நின்றதும் எல்லோரும் இறங்கி உள்ளே சென்றார்கள். சீதாலட்சுமி பெட்டியைத் திறந்து பணம் எடுத்து வருவதற்குள் சுகுமாரன் டிரைவருக்குச் சேரவேண்டிய பணத்தைக் கொடுத்து அனுப்பி விட்டான். சீதாலட்சுமி அந்தப் பணத்தைப் பெற்றுக் கொள்ளும்படி சுகுமாரனை வற்புறுத்தினாள். அவன் வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டுக் கூஜாவை எடுத்துக்கொண்டு ஓட்டலுக்குச் சென்றான்.

சீதாலட்சுமியும் நீலாவும் பல் துலக்கிவிட்டு அலுவல்களைக் கவனிக்கலாயினர். சுகுமாரன் திரும்பி வந்தான். அவன் கையில் இருந்த பெரிய பொட்டணத்தைக் கண்ட சீதாலட்சுமி, "இது என்ன சுகுமாரா? இட்டிலியா? எதுக்கு இத்தனை? நீராப் பொறியே என்று நான் காபிதான்..." என்று கூறி முடிப்பதற்குள் சுகுமாரன் இடை மறித்து, "நீங்கள் ஓட்டல் இட்டிலி சாப்பிடமாட்டீர்கள் என்று எனக்கும் தெரியும் மாமி. குழந்தைக்காகத்தான் வாங்கி வந்தேன்" என்றான் சிரித்துக் கொண்டே. பிறகு பொட்டணத்தையும் கூஜாவையும் கீழே வைத்துவிட்டுப் பையை எடுத்துக்கொண்டு மார்க்கெட்டுக்குக் கிளம்பினான்.

நீபாட்டுக்கு அம்பாரங்கணக்கிலே எதையாவது வாங்கி நிரப்பிக்கொண்டு வராதே. மட்டாக ஒரு கறிக்கும் குழம்புக்கும் மாத்திரம் ஏதாவது வாங்கி வா, போதும்" என்றாள் சீதாலட்சுமி. சுகுமாரன் சென்றான். சீதாலட்சுமி நீலாவிடம் பொட்டணத்தைக் கொடுத்துவிட்டுக் காபியை எடுத்து ஆற்றினாள். சமையல் அறையிலே போய் உட்கார்ந்து பொட்டணத்தைப் பிரித்த நீலா அப்படியே அசந்துபோனாள். நாலு இட்டிலி, ஒருதோசை, இரண்டு வடை, இரண்டு பூரி, கிழங்கு, சட்டினி எல்லாம் அதில் இருந்தன. 'இவர் என்னை என்னவென்று நினைத்தார்? பகாசுரன் அவதாரம் என்று

எண்ணிக்கொண்டாரா?' என்று நினைத்தபடி மலைத்தாற்போல் உட்கார்ந்திருந்தாள் அவள்.

"ஏன் நீலா? சாப்பிடவில்லை? ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்?" என்று கேட்டுக்கொண்டே அங்கே சென்றாள் சீதாலட்சுமி. நீலா கலகலவென்று சிரித்துக்கொண்டே பொட்டணத்தில் இருந்தவற்றை அவளுக்குச் சுட்டிக் காட்டினாள். அவற்றைப் பார்த்த சீதாலட்சுமியும் இடி இடி என்று சிரித்தாள். பிறகு, "அவன் எப்போதுமே இப்படித் தானடி. வெட்டிக்கொண்டு வா என்றால் கட்டிக்கொண்டுதான் வருவான். கேட்டால் என்ன சொல்வான் தெரியுமா? 'உங்கள் குழந்தைக்கு எது பிடிக்குமோ எது பிடிக்காதோ என்றுதான் வகைக்குக் கொஞ்சமாக வாங்கி வந்தேன்' என்பான். இப்போது மார்க்கெட்டுக்குப் போகும் போது நான் இத்தனை தூரம் சொல்லி அனுப்பியிருக்கிறேனல்லவா? பார்த்துக்கொண்டே இரு— என்ன செய்கிறான் என்று. அவன் சுபாவமே அப்படித்தான்" என்றாள்.

எப்போது சந்தர்ப்பம் வாய்க்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள்போலச் சட்டென்று, "அது சரி, யார் மாமி இவர்? நமக்கு ஏதாவது உறவா?" என்று கேட்டாள் நீலா.

"ஊருக்கு வந்திருந்த போதெல்லாம் வாய் ஓயாமல் இவனைப்பற்றிச் சொல்லி இருக்கிறேன். அப்போதெல்லாம் 'எங்கேயோ எண்ணெய் மழை பெய்கிறது' என்று கன அலட்சியமாக இருந்துவிட்டு இப்போது ஆசாமியை நேரில் பார்த்ததும் கன அக்கறையோடு விசாரிக்கத் தோன்றுகிற தாக்கும்!" என்றாள் சீதாலட்சுமி. பரிகாசம் கலந்த குரலில் அவள் இப்படி வெடுக்கென்று கூறி இடித்துக் காட்டினதும் நீலாவுக்கு மிகவும் வெட்கமாகப் போய்விட்டது. மௌனமாகத் தலையைக் குனிந்துகொண்டாள். சீதாலட்சுமி சொன்னாள்:

"உறவு உறவு என்று மாய்கிறோமே தவிரப் பார்க்கப் போனால் உறவைவிடச் சிநேகந்தான் உயர்வாக இருக்கிறது, இந்தக் காலத்திலே. நாங்கள் ராமேசுவரம் போயிருந்தபோது அங்கே ஒரு மிராசுதாரும் அவர் சம்சாரமும் எங்களுக்குச் சிநேகமானார்கள். அவர்களும் எங்களைப் போலவே தான் யாத்திரைக்கு வந்திருந்தார்கள். கல்யாணமாகிப் பன்னிரண்டு வருஷம் ஆகியும் அவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லையாம். கண்ணாடியிலே தோன்றும் பிரதிபிம்பங்களைப் போல அவர்களும் நாங்களும் ஒரே நிலையில் இருந்ததனாலோ

என்னவோ, எங்கள் நட்பு நெருக்கம் அடைந்தது. திரும்பு கையில் அவர்கள் நிர்ப்பந்தப் படுத்தி எங்களைத் தங்கள் ஊருக்கு அழைத்துப் போனார்கள். அங்கே நாலுநாள் தங்கினோம். அந்த ஊரிலேயே அவர்தான் பெரிய மிராசுதார். ஏராளமான நிலபுலன்களும் அழகான பெரிய வீடும் ரொக்கமும் அவருக்கு இருந்தன. அண்ணன் தம்பி இரண்டே பேர். சுகுமாரன் இளையவன். தகப்பனார் காலமானபோது அவன் ஆறுமாதக் குழந்தையாம். தாய் மிகவும் நல்ல அம்மாள். பிள்ளைக்குக் கல்யாணம் ஆகிப் பன்னிரண்டு வருஷம் ஆகியும் குழந்தை பிறக்கவில்லையே என்ற குறையோடு அந்த அம்மாளுக்கு இன்னொரு குறையும் இருந்தது. நாட்டுப் பெண் நல்ல உடம்பு உடையவள் அல்ல. ஏதோ வியாதி அவள் உடலை அரித்துக்கொண்டே இருந்தது. நாலு நாள் நடமாடினால் நாற்பது நாள் படுக்கையிலே இருப்பாளாம். அதனால் அவளுக்குச் சுகம் இல்லை; அவள் கணவருக்குச் சுகம் இல்லை; மாமியாருக்கு நிம்மதி இல்லை.

"பார்த்த மாத்திரத்திலேயே சிலரிடம் உருப் புரியாத வெறுப்பும், சிலரிடம் காரணமில்லாத அன்பும் ஏற்பட்டுவிடுகின்றன. அதில் தெய்வத்தின் கட்டளை ஏதோ இருக்கிறது என்பது என் அபிப்பிராயம். சுகுமாரனைக் கண்டதும் உன் மாமாவுக்கும் எனக்கும் அப்படித்தான் ஓர் அன்பு ஏற்பட்டது. அவன் பேச்சு, நடவடிக்கைகள் முதலியன அந்த அன்பை வளர்த்தன. அந்த வருஷத்திலே எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்துவிட்டு வெறுமனே இருந்தான் அவன். அவனுடைய புத்திசாலித்தனம், படிப்பிலே உள்ள ஆர்வம், அவன் வாங்கியிருந்த மார்க்குகள் முதலியவற்றை அறிந்த உன் மாமா அவனை மேற்கொண்டு படிக்கத் தூண்டினார். சுகுமாரனுக்கு இஷ்டந்தான். ஆனால் அவன் தாயும் தமையனும்,' 'படித்து ஆகவேண்டியது என்ன?' என்றார்கள். கடைசியில் உன் மாமா அவர்களைச் சரிப்படுத்திச் சுகுமாரனைத் தம்முடனேயே சென்னைக்கு அழைத்து வந்துவிட்டார். சிறிது காலம் அவன் நம் வீட்டிலேயே சாப்பிட்டுக்கொண்டிருந்தான். பிறகு தனி அறை ஏற்பாடு செய்துகொண்டு ஓட்டலில் சாப்பிட ஆரம்பித்தான். அப்படி இருந்தால்தான் நட்புக்குக் குறை வராது என்று அவன் நினைத்தான். அவன் அண்ணாவும் அம்மாவும் அப்படியே சொன்னார்களாம். நாங்களும் அதை ஆட்சேபிக்கவில்லை. 'எத்தைத் தின்றால் பித்தம் தெளியும்?' என்று பறக்கிற எங்கள் உள்ளங்களுக்கு அவன்தான் இது வரை சிறிது ஆறுதலாக இருந்து வருகிறான். இப்போது நீயும் வந்திருக்கிறாய். உன் மாமாவும் நானும் என்ன என்னவோ திட்டங்கள் போட்டுக்கொண்டிருக்

இரேும். தெய்வ சகாயம் இருந்தால் எல்லாம் நடக்கும்'' என்று கூறி முடித்தாள் சீதாலட்சுமி. நீலா அனைத்தையும் கவனித்துக் கேட்டாள். கடைசி வார்த்தைகளைக் கேட்டபோது, அவற்றின் உட்கருத்தை எண்ணிப் பார்த்தபோது அவள் உள்ளம் கிளு கிளுத்தது. ஆனால், 'அந்தத் திட்டங்கள் என்ன?' என்று சீதாலட்சுமியைக் கேட்கவில்லை. சற்றுப் பொறுத்து, "பிறந்து வளர்ந்தது கிராமத்தில்; பெயர் மட்டும்......''என்று வாயோடு முணுமுணுத்தாள். அதைக் கேட்ட சீதாலட்சுமி சிரித்துக் கொண்டே, "பெற்றோர் அவனுக்கு, 'சேஷு' என்று பாட்டனார் பெயரைத்தான் வைத்தார்களாம். பிறகு அவனுகச் சுகுமாரன் என்று வைத்துக் கொண்டானும்'' என்றாள்.

சுகுமாரன் சுமக்க முடியாமல் காய் கறிகளைச் சுமந்து கொண்டு வந்தான். அதைப் பார்த்த சீதாலட்சுமி சிரித்துக் கொண்டே, "பார்த்தாயா நீலா? சற்று முன்பு நான் சொன்ன தற்கென்ன, இவன் செய்திருக்கிறதற்கென்ன?'' என்றாள். சுகுமாரன், "என்ன என்ன? நான் இல்லாத இடத்திலே என்னைப்பற்றி...'' என்று சொல்லிக்கொண்டே நீலாவின் முகத்தைப் பார்த்தான். 'உங்களைப்பற்றி இங்கே யாரும் குறை கூறிக்கொண்டிருக்கவில்லை. எல்லாம் உங்கள் பிரதாபத் தைத்தான் அளந்துகொண்டிருந்தாள் மாமி' என்று சொல்ல வேண்டும்போல் இருந்தது நீலாவுக்கு. இதற்குள் அத்தனை துடுக்குத்தனம் கூடாது என்ற நினைவினுல் அதைப் பேசாத பேச்சின் மூலம் உணர்த்தினுள்.

"நேரமாகிவிட்டது மாமி. நான் போய் வருகிறேன்'' என்று கிளம்பினுன் சுகுமாரன். "வழக்கம்போல் சாயங்காலம் வந்து விடு'' என்றாள் சீதாலட்சுமி. அவன் சென்றதும், "ஒரு நாளில் பத்துத் தடவை ஓட்டலில் காபி சாப்பிட்டாலும் தினசரி சாயங்காலம் என் கையால் ஒரு வாய்க் காபி வாங்கிக் குடிக்கா விட்டால் சரிப்படாது அவனுக்கு'' என்றாள். நீலா மௌன மாகத் தலையை அசைத்தாள். அவள் நினைவு அவளிடம் இல்லை. அது சுகுமாரனேடு கூடவே சென்றுவிட்டது. அவன் சென்று வெகு நேரம் ஆன பிறகும் அவள் கண்களிலே அவன் உருவம் தோற்றமளித்துக் கொண்டே இருந்தது. செவிகளில் அவன் சொற்கள் ஒலித்துக் கொண்டே இருந்தன. உள்ளத்திலே உணர்ச்சி பொங்கிய வண்ணம் இருந்தது. சமையலில் ஈடுபட்ட சீதாலட்சுமிக்குச் சுற்றுக் காரியங்கள் செய்து கொடுத்தபோது அவள் புத்தி நிதானமின்றிக் காரியம் புரியாமல் கிடந்து தடுமாறினுள்.

# 3. சல்லாபம்

சாப்பாட்டுக்குப் பின் சற்றே கண்ணயரலாம் என்று நினைத்துப் படுத்த நீலா, இரவெல்லாம் ரெயிலில் கண் விழித்துக் கொண்டு வந்த அலுப்பால் நன்றாகத் தூங்கிப் போய் விட்டாள். தூக்கம் எத்தனை சுவாரஸ்யமாக இருந்ததோ அத்தனை சுவாரஸ்யமாக இருந்தது அப்போது அவள் கண்ட கனவு சீதாலட்சுமி காபியுடன் அருகே வந்து நின்று அதட்டிக் கூப்பிட்டு எழுப்பாமல் இருந்திருந்தால் அவள் தூக்கமும் கனவும் நீண்டு கொண்டேதான் இருக்கும்.

எழுந்து உட்கார்ந்த நீலா காபியை வாங்கிச் சாப்பிட்டுவிட்டுச் சூழ்நிலையை நினைவு கூர்ந்தாள். பிறகு சற்று முன் கண்ட கனவை நினைவிலே கொணர்ந்து சுவைத்தாள். மனம் உற்சாகத்தால் நிறைந்தது. எழுந்து சென்று மாமிக்கு உதவியாக ஏதோ சில சில்லறைக் காரியங்களைக் கவனித்துவிட்டுத் தலைவாரிப் பின்னிக்கொள்ள உட்கார்ந்தாள். சாயங்காலம் சுகுமாரன் வரும் போது, தான் அவன் எதிரில் பிரமாதமான அலங்காரத்தோடு காட்சி அளிக்க வேண்டும் என்று எண்ணினாள். முகத்தைக் கழுவிக்கொண்டு அலங்காரஞ் செய்துகொள்ளக் கூடத்திற்கு வந்தாள். அங்கே இருந்த பெரிய நிலைக்கண்ணாடியின் எதிரே நின்று சிங்காரித்துக் கொள்ளத் தொடங்கினாள்.

அப்போது வாசலில் கார் வந்து நிற்கும் சத்தங் கேட்டது. பின்னோடு, "சீதாலட்சுமி !........." என்ற குரலுங் கேட்டது. "வாருங்கள் மாமி, வாருங்கள்" என்று எதிர்கொண்டு அழைத்தாள் சீதாலட்சுமி.

"நீ காலையிலேயே ஊரிலிருந்து வந்துவிட்டாய் என்று கேள்விப்பட்டேன். அதனால்தான் இப்போது வந்தேன். வாசுதேவையர் பெண்ணுக்கு மூன்று நாளாய் உடம்பு கடுமை. இப்போது நான் அவளைப் பார்க்கத்தான் போகிறேன். நீயும் வந்தால் அழைத்துப் போகலாம் என்றுதான் இப்படியே வந்தேன் ......இவள்......இவள்தான் உன் நாத்தனார் பெண்ணா? இவளைத்தானே அழைத்துக்கொண்டு வரப் போகிறேன் என்றாய்? பார்த்தால் அப்படி ஒன்றும் பிரமாதமாக வயசானவளாகத் தோன்றவில்லையே? எங்கள் கங்கா, திலகம், விரஜா எல்லோரும் படிக்கிற கணக்குக்கு இவள் தாராளமாகப் படிக்கலாமே! ....." என்று மூச்சு விடாமல் மளமளவென்று பேசிக் கொண்டே போனாள் அந்த அம்மாள். அவள் சுபாவத்தை நன்கு அறிந்திருந்த சீதாலட்சுமி அவள் பேசி முடிக்கிற வரையில்

பொறுமையோடு இருந்துவிட்டுப் பின்னர் அவள் கேள்விகளுக்குப் பதிற் சொன்னுள். பிறகு தாழ்ந்த குரலில் நீலாவை வாசுதேவையர் வீட்டுக்கு அழைத்துப் போகலாமா, வீட்டிலேயே விட்டு விட்டுப் போகலாமா என்று யோசனை கேட்டாள். வாசுதேவையர் பெண்ணுக்குச் சங்கா தோஷம். சிறுமியான நீலாவை அங்கே அழைத்துச் செல்வது உசிதப் பிசகு என்று எண்ணினுள் சீதாலட்சுமி. அந்த அம்மாளும் அப்படியே அபிப்பிராயப்பட்டாள். இதையெல்லாம் கவனித்தும் கவனியாதவள் போல் இருந்த நீலாவுக்கு இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்ததிலே உள்ளுக்குள் பரம சந்தோஷம். 'மாமி திரும்பி வர நாழிகை ஆகலாம். அதற்குள் சுகுமாரன் வரக்கூடும். தனிமையான அந்தச் சந்திப்பு எப்படி இருக்கும்!' என்று எண்ணமிட்டாள் அவள்.

"நீலா, நான் போய்விட்டு நொடியில் திரும்பி வந்துவிடுகிறேன். வீட்டிலே ஜாக்கிரதையாக இரு" என்று சொல்லிக்கொண்டே அந்த அம்மாளுடன் கிளம்பினுள் சீதாலட்சுமி.

"சீக்கிரம் வந்துவிடுங்கள், மாமி. இருட்டிப் போனுல் பெரிய வீட்டிலே தனியாக இருக்க எனக்குப் பயமாக இருக்கும்" என்ருள் நீலா.

சீதாலட்சுமி, "ஆகட்டும். வந்து விடுகிறேன்" என்று புறப்பட்டுச் சென்ருள்.

நீலாவின் கண்டம் லேசாக ஒரு பாட்டை இசைக்கத் தொடங்கிற்று. கண்கள் நின்ற இடத்திலே நில்லாமல் நாற்புறமும் சுற்றிச் சுழன்று இந்திர ஜாலம் புரிவதும் அடிக்கடி கடிகாரத்தை நோக்குவதுமாக இருந்தன. கடிகாரத்தின் முட்கள் நகர நகர அவள் உள்ளத்திலே ஏற்பட்டிருந்த பரபரப்பு அதிகரித்துக்கொண்டே இருந்தது. உற்சாகங் கலந்த அந்தப் பரபரப்பின் சாயை முகத்திலே நிழலாடிற்று. அவள் அலங்காரஞ் செய்துகொள்ள ஆரம்பித்து வெகுநேரம் ஆகியும் இன்னும் அது முற்றுப் பெற்றபாடில்லை; மனசுக்குத் திருப்தி ஏற்பட்டபாடில்லை. அலங்காரப் பிரியையான அவள் என்றுமே அந்தக் காரியத்திலே அதிகப் பொழுதைச் செலவழிப்பது வழக்கம். இன்று இன்னும் விசேஷ சிரத்தையுடன் அந்தச் செயலிலே ஈடுபட்டிருந்தாள்.

கணீர் கணீர் என்று கடிகாரம் ஒலிக்கத் தொடங்கிற்று. அவள் அதை நிமிர்ந்து பார்த்தாள். மணி ஐந்து. 'இந்நேரம் வந்துகொண்டே இருப்பார்' என்றது அவள் உள்ளம். உடனேயே அவன் வந்துவிட்டாற் போலவும் எதிரே நிற்பது

போலவும் தன்னைப் பார்த்துப் புன்னகை புரிவது போலவும் ஒரு பிரமை. அந்தப் பிரமையினால் கண்ணாடியிலே தெரிந்த தன் பிரதி பிம்பத்தைப் பார்த்துத் தலையை ஒருபுறமாக ஒருக் களித்துக்கொண்டு தன்னைத் தானே மோகிக்கும் நிலையிலே புன்முறுவலித்தாள்.

இடையிடையே உருப் புரியாத ஒரு திகில் வேறு உள்ளத்தைத் தொட்டுப் பார்த்தது. 'அவர் வருமுன் மாமி வந்து விட்டால் தேவலை' என்று மனசு எண்ணிற்று. கணத்தில் அந்த எண்ணம் மாறிற்று. இப்படிப் பலவாறு மாறிமாறி எண்ண மிட்டபடி சந்தோஷம், பயம் இரண்டினாலும் ஏற்பட்ட இன்பமும் துன்பமும் கலந்த நிலையிலே அவள் இருக்கும்போது நடையிலே பூட்ஸ் சத்தம் கேட்டது. அவள் சட்டென்று திரும்பிப் பார்த்தாள். சுகுமாரன்தான். ஒருகணம் கண்கள் சந்தித்தன. பின்னர் அவள் தலை கவிழ்ந்தாள். அவன் முன்னிடைத் தாழ்வாரத்திலே வந்து நின்று சற்றுநேரம் அவளையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். 'காலையிலே பார்த்த பெண்தானா இவள்!' என்று வியந்து கொண்டான். பிறகு நாற்புறமும் நோக்கிவிட்டு, "மாமி!......" என்று கூப்பிட்டான். அவள் பதில் சொல்ல வாயெடுத்தாள். நாக்குச் சத்தியாக்கிரகம் செய்தது. அதற்குள் அவனே அவளை நோக்கி, "மாமி இல்லை?" என்று கேட்டான். அவள் பிரயாசைப்பட்டு, "இ...ல்...லை" என்றாள். சற்றுமுன் அவனைத் தனிமையிலே சந்திக்கத் துடித்த அவள் நெஞ்சு இப்போது அவனைத் தனிமையிலே சந்தித்ததால் ஏற்பட்ட பயத்தால் துடித்தது.

"எங்கே போயிருக்கிறார்கள்?"

"தெரியாது. யாரோ காரில் வந்து அழைத்துப்போனார்கள்."

"எப்போது வருவார்கள்?"

"அது மட்டும் எப்படித் தெரியும்?"

அவளுடைய கணீரென்ற குரலும் பளிச்சென்ற பதிலும் அவனைப் பிரமிக்க வைத்தன. அவன் அவளைப் பார்த்துக் கொண்டே கேள்விகளைக் கேட்டான். அவள் கண்ணாடியைப் பார்த்துக்கொண்டே பதிற் சொன்னாள். அவளுடைய மாதுரியக் குரலும் உதடுகளின் அசைவும் அவன் மனத்திற்கு ரம்மியமாக இருந்தன. கண்ணாடிக்குள்ளே தெரிந்த அவன் பிம்பமும் தன்னை அவன் பார்க்கிற பார்வையும் ஆர்வங்கலந்த கேள்விகளும் அவள் மனசுக்குக் களிப்பை உண்டுபண்ணின. சகஜமாகக் கேட்கக் கூடிய கேள்விகளும் சொல்லக்கூடிய பதில்களும் முடிவடைந்த பின் மேலே என்ன பேசுவது என்ற திகைப்பு எழுந்தது.

"குடிக்கிறதுக்குக் கொஞ்சம் ஜலம் வேண்டும்."

நீலா உள்ளே சென்ருள்; தம்ளரில் ஜலத்தை எடுத்து வந்தாள்; தாழ்வாரத்துக் குறட்டோரமாக வைத்தாள்; குனிந்த தலை நிமிராமல் வந்தது போலவே திரும்பிச் சென்ருள். அவன் போய்த் தம்ளரை எடுத்தான். அவளைப் பார்த்துக்கொண்டே அதை எடுத்ததில் கை தவறிற்று. தம்ளர் கீழே விழுந்தது. 'டணர்' என்ற சத்தம் அவளைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. 'அட அசடே! ஒரு தம்ளர் ஜலத்தை எடுத்துக் குடிக்கக்கூடவா உனக்குச் சமர்த்தில்லை? அதைத் தூக்கக்கூடவா சீவன் இல்லை?' என்று கேட்கிற பாவனையிலே அவள் பார்வை இருப்பதாக அவனுக்குத் தோன்றிற்று. வெட்கமுறுபவன்போலச் சற்றுத் தலை கவிழ்ந்தான். அவள் உள்ளே சென்று இன்னொரு தம்ளரில் ஜலங் கொண்டு வந்து வைத்தாள். அவன் அதி ஜாக்கிரதை யுடன் அதை எடுத்துக் குடித்தான். எவ்வளவு? ஒரே ஒரு வாய்.

"உன் பெயர்......என்ன?"

சடக்கென்று திரும்பிப் பார்த்தாள் அவள். அவள் முகத் திலே அப்போது எத்தகைய பாவம் இருந்ததென்பதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. 'நேரடியான இந்தக் கேள்வி அநாவசியமும் அநுசிதமும் ஆயிற்றே; அவள் என்ன நினைத்துக் கொள்வாளோ' என்ற பயத்தோடு எழுந்த கேள்வியாகையால் நேருக்கு நேராக அவள் முகத்தைப் பார்க்க அப்போது அவனுக்குத் தைரியம் இல்லை. கேள்வியைக் கேட்டு விட்டுத் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தான். அதற்கு ஏற்றாற் போலவே இருந்தன அவள் விடுத்த பதில் கேள்விகள்.

"ஏன்?......எதுக்கு?"

சுகுமாரன் வெதறிப் போய்விட்டான். நடுங்கிய குரலில், "சா...தா...ர...ண...மா...க...வெறுமனே தான்...கேட்டேன்" என்ருன்.

அவன் நிலை அவளுக்குப் புரிந்து போய்விட்டது. அவனைக் கொஞ்சம் தமாஷ் செய்து ஓடவிடலாமா என்று நினைத்தாள். விபரீதத்தில் முடிந்துவிட்டால் என்ன செய்வது என்று தயங் கினுள். இருந்தும் மையமாகச் சொல்லி வைத்தாள்.

"காலையிலே மாமி சொன்னுர்களே, அதற்குள் மறந்து போய்விட்டதா?"

அவன் உள்ளம் சற்றுத் தெளிந்தது. நிமிர்ந்தான். அவள் தன்னைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருப்பதைக் கண்டான். தைரியம் அதிகரித்தது.

"நான் எதையுமே மறப்பவன் அல்ல. அப்படிப்பட்டவன் அழகான பெயரையும் அந்தப் பெயருக்கு உரியவரையும் மறப்

பேனு? மாமி இரண்டு பெயர்கள் சொன்னார்கள். எது நடைமுறையிலே உள்ளது என்று புரியாததால்தான் கேட்டேனே தவிர மறந்து அல்ல."

"இரண்டு பெயர்களா?"

"ஆமாம்."

"என்ன என்ன?"

"ஒன்று நீலா, இன்னொன்று...கு...ழ...ந்...தை...!..."

"பூ! என்னவோ என்று பார்த்தேன்."

"நீ படித்திருக்கிருயா?"

"ஏன்?"

"ஒவ்வொரு கேள்விக்கும் இப்படி, 'ஏன், எதுக்கு?' என்றெல்லாம் திருப்பிக் கேட்டுக் கொண்டே இருந்தால் எப்போது தான் நான் எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்து கொள்வதாம்?"

"எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் என்ன என்றுதான் இப்போதும் கேட்கிறேன்."

"அவசியம் என்று ஒன்று தனியாக உண்டா? எங்கள் புரொபஸர் மருமாள் ஆயிற்றே என்று தான். எங்கள் மாமியின் மருமாள் ஆயிற்றே என்று தான்."

"ஓகோ! புரொபஸரையும் மாமியையுமே கேட்டுத் தெரிந்துகொள்ளலாமே! சின்னஞ் சிறிசு தனியாக இருக்கிற போது என்ன பேச்சு?"

அவள் குரலிலோ வார்த்தைகளிலோ கடுமையை அவன் காணவில்லை. இருந்தும் திடுக்கிட்டுப் போனுன். 'எந்தப் புற்றிலே எந்தப் பாம்பு இருக்குமோ!...' என்ற கலவரத்தோடு, "ஆ!..." என்று அவளைத் திரும்பிப் பார்த்தான். அவள் மேல் வரிசைப் பற்களால் கீழ் உதட்டைக் கடித்த வண்ணம் மூண்டு வந்த சிரிப்பை அடக்க முயன்று கொண்டிருப்பதைக் கண்டான். உள்ளுக்குள் சந்தோஷம் பொங்கிற்று.

'இந்தச் சிறுமிக்கு இத்தனை இருக்கிற போது......நாமும் தான் இவளைக் கொஞ்சம் ஓட விடுவோமே!......'

"நீலா, நான் செய்தது தவறுதான். என்னை மன்னித்துவிடு. நான் வருகிறேன்."

சடக்கென்று வாசற்புறம் திரும்பி நடந்தான் அவன். கேட்டைத் தாண்டுகிற நிலையில், 'போய்விடலாமா வேண்டாமா?' என்ற பிரச்னை எழுந்து கால்களைப் பின்னிப் பிணைத்தன. தயங்கி நின்ருன். பிறகு வராந்தாவின் கோடியிலே இருந்த சிறு திண்ணையிலே போய்ச் சாய்ந்தாற்போல உட்கார்ந்து கொண்டான்.

அவன் பட பட வென்று பேசிவிட்டு வாசற்பக்கம் சென்றதும் கூடத்திலிருந்து தாழ்வாரத்திற்கு வந்து மெல்ல எட்டிப் பார்த்தாள் நீலா. அவன் தயங்கி நிற்பதையும் பிறகு வராந்தாவின் கோடிக்குச் செல்வதையும் கண்டாள். உடனே காமிரா அறைக்குள் சென்றாள். அங்கே தெருவைப் பார்த்தாற்போல ஒரு ஜன்னல். அதற்கு அப்பால் வெகு சமீபத்திலேதான் இருந்தது வராந்தாத் திண்ணை. அவள் அந்த ஜன்னலோரம் சென்று நின்றாள். இருவருக்கும் இடையே கை எட்டுந் தூரந்தான் இருந்தது. சந்தடியின்றி வந்து நின்றவள் சற்று நேரம் அவனையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் பின் அழகை ரஸித்தாள். பிறகு ஜன்னற் கதவை நகத்தால் சுரண்டினாள். கை வளையல்களைக் கல கல வென்று குலுக்கினாள். பொய்யாக இருமினாள். ஒன்றுக்கும் அவன் அசைந்து கொடுக்கவில்லை. கடைசியில் வெட்கத்தைவிட்டு, “கோபமா?” என்றாள். அவன் அப்பொழுதும் திரும்பிப் பார்க்கவில்லை.

“உம்?... உங்களைத்தான்!......கோபமா?......உம்?......பேச மாட்டீர்கள்;...திரும்பிப் பார்க்க மாட்டீர்கள். சரி. இதோ பாருங்கள், இனிமேல் ஊருக்குப் போகிறவரையில் நானும் உங்களோடு பேசவேமாட்டேன்; சொல்லிவிட்டேன்.”

இந்த அஸ்திரம் வேலை செய்யத்தான் செய்தது. அவன் திரும்பிப் பார்த்தான். பிரயாசைப்பட்டு முகத்தின் கடுமை மாறாமல் வைத்துக்கொண்டு, “சின்னஞ் சிறு பையன் தனியாக இருக்கிற போது என்ன பேச்சு?” என்றான். அவள் கல கல வென்று சிரித்தாள்.

“ஆகாகா! பதிலுக்குப் பதில் சொல்லிக் காட்டி விட்டீர்களாக்கும்!” என்றாள் பரிகாசத்துடன். பிறகு, “நீங்கள் சினிமாவிலே நடிக்கலாம்” என்றாள்.

“கதாநாயகியாக நடிக்க நீயும் வந்தால்—”

வெடுக்கென்று அவன் இப்படிச் சொல்வான் என்று அவள் எதிர் பார்க்கவில்லை. ‘நாம் அவரைச் சொன்ன போது பதிலுக்கு அவர் நம்மைச் சொன்னதில் என்ன தவறு?’ என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள். பிறகு, “எனக்கு என்ன தெரியும் நடிக்க?” என்றாள், கிண்டலாக.

“ஏன்? அதுதான் சற்றைக்குள் இத்தனை நடிப்பு நடித்து விட்டாயே! ‘உம்?...உங்களைத்தானே?...கோபமா?...உம்?... பேசமாட்டீர்கள்?...திரும்பிப் பார்க்க மாட்டீர்கள்?...’ என்பனவெல்லாம் சினிமாவிலே கதாநாயகி நாயகனைப் பார்த்துக்

கேட்பது போலவும், குடும்பத்திலே சகஜமாகத் தினசரி வாழ்விலே மனைவி கணவனைப் பார்த்து......"

அவள் கன்னங்கள் நாணத்தால் குப்பென்று சிவந்து போயின. "போதும் போதும்!" என்று காதுகளைப் பொத்திக் கொண்டாள். அவன் இடி இடி என்று சிரித்துக் கொண்டே, "இதோ பார் நீலா, இப்போது நீ என்னிடம் வசமாக மாட்டிக் கொண்டுவிட்டாய்" என்பதற்குள் அவள் சமத்காரமாக, "ஒரு போதும் இல்லை. அப்படி நீங்கள் நினைத்தால் அது உங்கள் பிரமை!" என்றாள்.

அவன் முகம் ஏமாற்றத்தைக் காட்டிற்று.

"நிஜமாகவா? பின் ஏன் என்னைச் சமாதானம் செய்யப் பாடுபட்டாயாம்?"

"அது என் சுபாவம்."

"எது? சம்பந்தா சம்பந்தம் இல்லாத ஒருவனின் கோபத்தைச் சமாதானம் செய்யப் பாடுபடுவதா?"

அவள் கண்கள் சிவந்தன. உதடுகள் துடித்தன.

"மனம் போனபடி பேசாதீர்கள். எங்கள் வீட்டிலே யார் கோபமாக இருந்தாலும் காண நான் சகிக்கமாட்டேன். அவர்களைச் சமாதானம் செய்ய முயல்வேன். அதே முறையில் உங்களையும் இந்தக் குடும்பத்திலே ஒருவராக நினைத்துத்தான் சமாதானம் செய்ய வந்தேனே தவிர தெருவோடு போகிற முன் பின் பரிசயம் இல்லாதவர்களை யெல்லாம் இருத்தி முகந்திருத்த நான் ஒரு 'இவள்' அல்ல."—

சொற்களின் ஒலி அடங்கினபோது அவள் கூடத்திலே இருந்தாள். அவன் பிரமித்துப் போனான். 'ஏ அப்பா! ஆசாமி லேசுப்பட்டவள் அல்ல' என்று மனசுக்குள் நினைத்துக் கொண்டான். 'நமக்குப் பொருத்தம் இவள்தான்' என்று எண்ணிக் கொண்டான். அந்தப் பிணக்கு அவன் மனசுக்கு மிகவும் ரம்மியமாக இருந்தது. எழுந்து நின்று ஜன்னல் வழியே மெல்லிய குரலில், "நீலா, நீலா!" என்று அழைத்தான். அவள் வரவில்லை. பதிலுக்குக் குரலும் தரவில்லை. அவனுக்குப் பொறுக்கவில்லை. வேகமாக உள்ளே சென்றான். முன்பு நின்று கொண்டிருந்த இடத்தை அடைந்து கண்ணைச் சுழற்றி நாற்புறமும் நோக்கினான். அவள் சமையல் அறை ஓரமாக உட்கார்ந்து மலர் தொடுத்துக்கொண்டிருந்தாள். அந்தக் காட்சி அதி அற்புதமாக இருந்தது.

"நீலா, நீ இத்தனை கோபக்காரியாக இருப்பாய் என்று எடுப்பிலே தெரியவில்லை. இப்பொழுதே இப்படி இருந்தால் வருஷக் கணக்கிலே நாம் எப்படிக் காலந் தள்ளுவது?......"

அவளை வெட்கம் பிடுங்கித் தின்றது. எனினும் அவன் சொல்லுக்குள் இருக்கும் கருத்தின் இனிப்பைச் சுவைத்து மகிழத்தான் செய்தாள். நாணத்தோடு தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். அவன் மேலும் தொடர்ந்து சொன்னான்.

"………சரி, இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டினால் தானே சத்தம்? ஒருவர் ஒதுங்கிப் போய்விட்டால்? அந்தக் காரியத்தை நானே செய்துவிடுகிறேன். இன்றே அந்த வழியைக் கடைப் பிடிக்கிறேன். நீலா, நான் இதுவரை பேசியவற்றிலே ஏதாவது தவறு இருக்குமானால் அதற்காக என்னை மன்னித்துவிடு. உன்னை மிகவும் வேண்டிக் கொள்கிறேன். நீ கோபத்தோடு இருப்பது பார்ப்பதற்கு மிகவும் அழகாகத்தான் இருக்கிறது. என்றாலும் அதற்காக அந்த நிலையை அளவு கடந்து ரஸிக்க முடியவில்லை. மனம் வேதனைப்படுகிறது. தயவுசெய்து உன் 'பொய்க் கோப'த்தைவிட்டு மெய்யன்போடு என்னிடம் சில வார்த்தைகள் பேச மாட்டாயா?……"

அவள் மனம் இளகிவிட்டது. அவன் நடிப்பு சிரிப்பை உண்டுபண்ணிற்று. சிரித்துக் கொண்டே நிமிர்ந்தாள். கண்களை மலர்த்தி அவனைப் பார்த்தாள். அமிருத வர்ஷம் பொழிந்தாற் போல் இருந்தது அவனுக்கு. அப்படியே சொக்கிப் போனான்.

"சரிதான். நாடக மேடைதான். நிஜமாகத்தான் சொல்கிறேன்; நீங்கள் சினிமாவிலே நடிக்கலாம். உங்கள் பேச்சுக்கும், தோற்றத்திற்கும், முக வசீகரத்திற்—"

நறுக்கென்று நாக்கைக் கடித்துக் கொண்டாள் அவள். அப்படி யெல்லாம் தான் அவனை வருணிப்பது தகுமா என்கிற எண்ணம் இடையே குறுக்கிட்டது. அளவைக் கடந்து விட்டதற்காக வெட்கினாள். ஓரளவு வருந்தக்கூடச் செய்தாள்.

"ஏன் கேலி செய்வது நின்றுவிட்டது? உலகத்திலே எத்தனை எத்தனையோ அவலட்சணங்கள். அவர்களில் நானும் ஒருவனாக இருந்துவிட்டுப் போகிறேனே!……"

துயரத்தோடு பேசுவது போல் அவன் குரலை மாற்றிக் கொண்டு பேசினதும் அவள் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். அவன் முகபாவமும் வருந்துவது போலவே இருந்தது.

"அட ராமா! நான் கேலி ஒன்றும் செய்யவில்லை. நிஜமாகத் தான் சொன்னேன்."

"நிஜமாகவா? நிஜமாகவே நான் நன்றாக இருக்கிறேன் என்றா நீ சொல்கிறாய்? உனக்கு என்னைப் பிடித்திருக்கிறதா?"

பைத்தியங் கொண்டவன் போல அவன் இப்படிக் கேட்டதும் அவள் இடி இடி என்று சிரித்தாள்.

"கதம்பம், மல்லிகைப் பூ, ரோஜாப் பூ......"

தெருவிலே எழுந்த இந்தக் குரலைக் கேட்டுப் பரபரப்புடன் எழுந்தாள் அவள். லாகவமாக அவன் இருந்த இடத்தைத் தாண்டி வராந்தாவுக்குச் சென்றாள். பூக்காரியைக் கூப்பிட்டாள். அவளிடம் ரோஜாப்பூ கொஞ்சந்தான் இருந்தது. அதுவும் வாடல். இருந்ததை விலை பேசி எடுத்துக் கொண்டு உள்ளே திரும்பினாள். சுகுமாரன் அவள் கைப் பூவைப் பார்த்தான்.

"எல்லாம் ஒரே வாடலாக இருக்கிறதே!"

"எப்படி இருந்தாலும் பரவாயில்லை. எனக்கு ரோஜாப் பூ என்றால் உயிர்."

அவள் சில்லறை எடுக்க உள்ளே போனாள். அவன் தெருப் பக்கம் போய்ப் பூக்காரிக்குச் சில்லறை கொடுத்து அவளை அனுப்பிவிட்டான். மீண்டும் அவன் உட்புறம் திரும்பும்போது பின்னாலிருந்து, "சுகுமார்!" என்று குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தான். அவன் நண்பன் கோபாலன் தெருவிலே ஒடுங்கி நின்று கொண்டிருந்தான். "புரொபஸர் வந்து விட்டாரா?" என்று மெல்லிய குரலில் கேட்டான். சுகுமாரன், "இல்லை" என்றதும், "உன்னிடம் முக்கியமான ஒரு சமாசாரம் சொல்ல வேண்டும். சற்று இப்படி வாயேன்" என்றான் கோபாலன். சுகுமாரன் சென்றான். கோபாலன் அவன் தோள்மீது கையைப் போட்டு அணைத்தபடி இரகசியமாக ஏதோ பேசிக்கொண்டே நடந்தான்.

நீலா சில்லறையுடன் அறையிலிருந்து கூடத்திற்கு வந்தாள். அங்கே சுகுமாரனைக் காணவில்லை. வராந்தாவுக்குச் சென்றாள். அங்கே பூக்காரியைக் காணவில்லை. வாசற்படியிலே வந்து எட்டிப் பார்த்தாள். சுகுமாரன் யாருடனோ பேசிக் கொண்டு போவதைக் கண்டாள். அவன்மீது வைத்த கண் வாங்காமல் அசைவற்று நின்றாள்.

தன்னை மறந்த நிலையில் வாசற்படியிலே நின்றிருந்த நீலாவின் சிந்தனையைப் 'பூம் பூம்' என்ற குழலோசையுடன் வந்து நின்ற மோட்டார் கலைத்தது. அவள் திரும்பிப் பார்த்தாள். சீதாலட்சுமி காரிலிருந்து இறங்கினாள். உடனே கார் போய் விட்டது. சீதாலட்சுமியும் நீலாவும் உள்ளே நுழைந்தார்கள்.

"சுகுமாரன் வந்தானோ நீலா?"

என்ன பதில் சொல்வது என்று புரியாமல் தவித்தாள் அவள். வேறு ஏதோ பேசி அவள் கவனத்தைத் திருப்ப முயன்றாள். ஆனால் சீதாலட்சுமி அந்த ஒரே தடவையோடு அந்தக் கேள்வியை விட்டு விடாமல் திருப்பித் திருப்பி நாலைந்து தடவை

கேட்டதும் அவளுக்கு மிகவும் சங்கடமாகிவிட்டது. "வ...ந்... தா...ர். நீங்கள்...இல்லை என்றதும்...போய் விட்டார்..." என்று தடுமாறிய குரலில் பதிற் கொடுத்தாள்.

"அடாடா! போய்விட்டானா குழந்தை!" என்று சீதா லட்சுமி மிக்க ஆதங்கத்தோடு கேட்டு வாய்மூடு முன் நடையிலே காலடி ஓசை கேட்டது. இருவருமே ஆவலோடு எட்டிப் பார்த்தாகள். சுகுமாரன்தான். சீதாலட்சுமிக்குச் சந்தோஷந் தாங்கவில்லை. "வந்து விட்டாயா? நல்ல வேளை! நான் இல்லை என்றதும் நீ போய்விட்டாய் என்றாள் நீலா. என் மனசு ரொம்பவும் வேதனைப்பட்டது. உட்கார்" என்று சொல்லிவிட்டு அவனுக்குக் காபி தயாரித்து எடுத்துவர உள்ளே சென்றாள் சீதாலட்சுமி. நீலாவும் சுகுமாரனும் ஒருவரை ஒருவர் கடைக் கண்ணால் பார்த்துக் கபட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டார்கள். சீதாலட்சுமி சுகுமாரனுக்குக் காபி கொண்டு வந்து கொடுத்தாள். அவன் அதை வாங்கிக்கொண்டு அவளை நோக்கி, "எங்கே போயிருந்தீர்கள் மாமி?" என்று வினவினான். அவள் தான் போய் வந்த காரியத்தை விவரமாகச் சொன்னாள். நீலா சமையல் அறை வாசற்படியோரமாக அமர்ந்து ஏற்கனவே தொடுத்துக் கொண்டிருந்த பூவைத் தொடுக்கலானாள். காபி பாத்திரங்களுடன் சீதாலட்சுமி திரும்பவும் சமையல் அறையில் நுழைந்தபோது அவள் கண்ணிலே நீலா வாங்கி வைத்திருந்த ரோஜாப் பூ தென்பட்டது.

"ரோஜாப்பூ ஏது நீலா? வாங்கினாயா?"

"ஆமாம்."

"அட கஷ்டமே! இது ரோஜாப் பூவா, ரோஜாச் சரகா? பைத்தியம் பைத்தியம்!" என்று சொல்லிவிட்டு மீண்டும் கூடத்திற்குத் திரும்பி வந்து சுகுமாரனைப் பார்த்து, "சுகுமாரா, நாளைக்கு நீ பூக்கடைப் பக்கம் போனால் கொஞ்சம் ரோஜாப்பூ வாங்கிவா. இந்தப் பெண்ணுக்கு ரோஜாப்பூ என்றால் போதும்; சாப்பாடு கூட வேண்டாம். அதன்மேல் அத்தனை ஆசை. ஏதோ இத்தனை அவிசல் பூக்களை வாங்கி வைத்துக்கொண்டு தொடுக்கிறாள் பார். மறக்காமல் கொஞ்சம் வாங்கி வருகிறாயா?" என்றாள்.

"ஆகட்டும்" என்று அலட்சியமாகச் சொல்கிறவன் போல மேலுக்குச் சொன்னான் சுகுமாரன். உள்ளுக்குள், 'பூக்கடைப் பக்கம் போனால் என்ன? இதற்கென்றே போய் வருகிறேன். இதை விட மற்றக் காரியங்கள் பெரிதில்லையே எனக்கு' என்று எண்ணிக் கொண்டான். மேலும் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு விடை பெற்றுச் சென்றான் அவன்.

# 4. நீலாம்பரி

அன்று இரவு சாப்பாடு, தூக்கம், நண்பர்களின் சம்பாஷணை எதையுமே ஏற்கவில்லை சுகுமாரனின் உள்ளம். சதா காலமும் நீலாவைப்பற்றியே எண்ணமிட்டுக்கொண்டிருந்தான். மாலையில் தனக்கும் அவளுக்கும் இடையே நடந்த நாடகங்களைத் திரும்பத் திரும்ப நினைவிலே கொணர்ந்து ரசித்துக் கொண்டிருந்தான். இரவு வெகு நேரம் வரையில் நித்திரையின்றிப் படுக்கையிலே புரண்டு கொண்டு கிடந்தான். அவன் மனக் கண்ணெதிரே அவள் ஜொலித்துக்கொண்டே இருந்தாள்.

வாட்டசாட்டமான தோற்றம். சந்தனக் கட்டைகள் போன்று மழமழவென்ற கரங்கள். அவற்றிலே கண்ணாடியாலும் பொன்னாலும் ஆன அழகழகான பலபல வண்ண வளையல்கள். நிலா இறைக்கும் முகம். விற்போன்ற புருவங்கள். இங்கும் அங்கும் துள்ளிப் பாய்ந்து ஜாலங் காட்டும் அகன்ற நீண்ட அழகிய கயல் விழிகள். வெண் முத்துச் சரங்கள் போன்ற பல் வரிசைகள். நீண்ட கருநாகம் போன்று முதுகிலே புரளும் ஜடை. அதன் உச்சியிலே குலுங்கும் வாச மலர்கள். குயிலினும் இனிய குளுமையான குரல். ரத்தினம் தெறித்தாற்போன்ற அர்த்த புஷ்டியான சொற்கள். சந்தனக் கலர்ப் பட்டுப் பாவாடை. அதன் மேன்மையை எடுத்துக் காட்டும் கறுப்புப் பார்டர். கிளிப் பச்சை வர்ணத்தையுடைய ஜம்பர். கிளி வாயின் சிவப்பை யொத்த நிறத்திலே பூ வேலைப்பாடு அமைந்த தாவணி. ஒயிலான நடை. அந்த நடையிலேதான் எத்தனை தளுக்கு!...பக்கத்தில் அந்த வீணை. அவள் தோன்றும் போதெல்லாம் அந்த வீணையும் கூடவே தோன்றிற்று. அதற்கும் அவளுக்குந்தான் எத்தனை பொருத்தம்! '......அவள் பாடிக் கேட்க வேண்டும்; வீணை வாசித்துக் கேட்க வேண்டும்......'

திரும்பத் திரும்ப இதே நினைவுதான். அவனுக்குத் தூக்கம் எங்கிருந்து வரும்? இரவு பூராவும் சிவராத்திரிதான்.

மறு நாள் அவன் கல்லூரிக்குச் செல்லவில்லை. அங்கேதான் இன்னும் பாடம் ஒன்றும் ஆரம்பமாகவில்லையே! இரவெல்லாம் தூங்காத களைப்பு வேறு. கல்லூரிக்கு மட்டம் போட்டான். வேலை தப்பி வேளையிலே போனால் மாமி ஏதாவது நினைத்துக்கொள்வாளென்று பகற் பொழுதை எல்லாம் படுக்கையிலே கிடந்தபடி பல்லைக் கடித்துக்கொண்டு போக்கினான். தன் நிலையை எண்ணிப் பார்த்ததும் அவனுக்குச்

சிரிப்பு வந்துவிட்டது. 'மனசுக்குப் பிடித்த பெண்ணாக அமைந்துவிட்டால் படிப்பை மறந்து அந்தப் பெண்ணையே சுற்றி அலையத் தோன்றும்' என்று முதல் நாள் காலையில் சீதா லட்சுமியிடம் தான் சொன்னது நினைவில் வந்தது. 'அமைந்து விட்டால் என்று சொன்னேன்; மனசுக்குப் பிடித்த பெண்ணைப் பார்த்த மாத்திரத்திலேயே மனசு அவளைச் சுற்றிச் சுற்றி அலைகிறதே!' என்று எண்ணினான். 'ஆனால் இப்பேர்ப்பட்ட பெண்ணைவிட படிப்பு மட்டும் என்ன; வெறு எதுதான் உயர்த்தி? எத்தனை எத்தனையோ ஜன்மங்களில் தவம் செய் தால்கூட இவளைப் போன்ற பெண்ணை அடைவதென்பது எளிதான காரியம் அன்றே!... இவள்...எனக்குக் கிட்டுவாளா?... மாமாவும் மாமியும் மனசு வைத்தால் காரியம் நடைபெறலாம். அவர்கள் மனசு வைப்பார்களா?......அவர்களுக்கு என் மேல் இருக்கிற அன்பு சாமான்யமானதா? கட்டாயம் மனசு வைப் பார்கள். அப்புறம் அவள் பெற்றோர் சம்மதிக்க வேண்டும். மற்றோர் சம்மதிப்பது ஒருபுறம் இருக்க முக்கிய பாத்திரமாகிய அவள் இஷ்டப்பட வேண்டும். பார்வை, சிரிப்பு, பேச்சு முதலியவற்றைப் பார்த்தால் அவளுக்கு என்னைப் பிடித்த மாதிரி தான் தோன்றுகிறது. ஆனால் பெண்களின் உள்ளம் கடலினும் ஆழமானது என்பார்கள். மேல் நடவடிக்கைகளைக்கொண்டு எதையும் நிச்சயித்துவிட முடியாது. இருக்கட்டும் பார்க்க லாம்......'

மணி மூன்று அடித்தது. அவன் எழுந்து சென்று குளித் தான். சிற்றுண்டி, காபி உட்கொண்டான். நாசுக்காக உடுத் துக்கொண்டான். பூக்கடையை நோக்கிச் சென்றான். ஒரு கூடை ரோஜாப் புஷ்பங்களை வாங்கிக்கொண்டு திரும்பினான். உமா பதியின் வீட்டை அடைந்தான்.

"என் சுகுமாரா, இது என்ன, நீ ஏதாவது பிரார்த்தனை செலுத்தப் போகிறாயா? அம்மனுக்கு நிலை மாலை சாத்தப் போகிறாயா? எதுக்கு இத்தனை பூ?" என்றாள் சீதாலட்சுமி.

"நல்லதாகவும் மலிவாகவும் கிடைத்தது; வாங்கி வந்தேன். தொடுத்துப் படங்களுக்குச் சாத்துகிறது; ஆசைப்படுகிறவர் கள் நிறைய வைத்துக்கொள்கிறது" என்றான் அவன்.

நீலாவின் கண்கள் சுகுமாரனிடமும் அவன் வாங்கி வந்திருந்த புஷ்பத்தினிடமும் மாறி மாறிப் பாய்ந்தன. வீடு முழுதும் நிறைந்து கமழ்ந்த ரோஜாவின் நறுமணம் அவள் உள்ளத்தைக் கிறுகிறுக்கச் செய்தது.

வழக்கம் போலச் சீதாலட்சுமி சுகுமாரனுக்குக் காபி கொண்டு வந்து கொடுத்தாள். அவன் அதைச் சாப்பிட்டு

விட்டுத் தாழ்வாரத்து மூலையிலே கிடந்த சோபாவிலே அமர்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். மாமி புஷ்பத்தைக் கொண்டுபோய் நீலா விடம் கொடுத்துவிட்டுத் தன் அலுவல்களைக் கவனிக்கலானாள். நீலா பூவைத் தொடுக்க ஆரம்பித்தாள்.

சுகுமாரனின் உள்ளம் நீலாவின் அன்றைத் தோற்றத்தைப் பற்றி எண்ணிச் சுவைத்துக்கொண்டிருந்தது. முதல் நாள் மாலையில் அவள் அலங்காரம் ஒரு மாதிரியாக இருந்தது. இன்று வேறு விதமாக இருந்தது. நேற்றுப் பாவாடை, ஜம்பர், தாவணி; இன்று சிற்றுடையும் ஜாக்கெட்டும். நேற்று சந்தனக் கலர், பச்சை வர்ணம், சிவப்பு நிறம்; இன்று கறுநீலப் பட்டுச் சிற்றுடை, கண்ணைப் பறிக்கும் வெள்ளை வாயில் ஜாக்கெட். ஒவ்வோர் உடையிலும் அவள் புதுமைக் கன்னியாகவே காட்சியளித்தாள். ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு மாறினதும், 'முன்னதைவிட இதுவே இவளுக்கு மிகப் பொருத்தம்' என்று எண்ணத் தோன்றிற்று. 'நீலா எப்போதும் அன்றலர்ந்த மலர்' என்றது அவன் மனம்.

சீதாலட்சுமி காரியங்களை முடித்துக்கொண்டு வேலைக் காரிக்கு ஏதோ சில கட்டளைகள் இட்டுவிட்டுக் கூடத்திலே வந்து அமர்ந்தாள். நீலா, தான் தொடுத்த மலர் மாலைகளைக் கொண்டு வந்து அவளிடம் வைத்தாள்.

சீதாலட்சுமி ஒன்றுந் தோன்றாமல், "ஏன் இதையெல்லாம் கொண்டு வந்து என்னிடம் வைக்கிறாய்? படங்களுக்குச் சாத்தி விடேன்" என்றாள்.

"என்னால் எப்படி மாமி முடியும்? படங்கள் எனக்கு எட்டுமா? நீங்கள் சாத்துங்கள், இல்லாவிட்டால்......"

"எனக்குமட்டும் எப்படி எட்டும்?...சுகுமாரா, எழுந்திருந்து கைகால்களை அலம்பிக்கொண்டு சற்றே இந்த மாலைகளைப் படங் களுக்குச் சாத்தேன். குழந்தைக்குப் படங்கள் எட்டா—" என்று சொல்லிக்கொண்டே எதையோ நினைத்துக்கொண்டு வேகமாக எழுந்து கிணற்றடிக்குச் சென்றாள் சீதாலட்சுமி.

சுகுமாரன் எழுந்தான். கூடத்தில் வைத்திருந்த பூமாலை களைப் பார்த்தான். படங்களைப் பார்த்தான். பிறகு சமையல் அறை வாசற்படி அருகில் நின்றிருந்த நீலாவைப் பார்த்தான். சட்டென்று கிணற்றடிப் பக்கம் எட்டிப் பார்த்துவிட்டு, "படங்களுக்கு மட்டும் சாத்தினால் போதும் அல்லவா? அவை தாம் கைக்கு எட்டா. தன் தலையிலே தானே வைத்துக் கொள்ள வாவது கை எட்டுமா, அல்லது அதற்கும்..." என்று குறும்புச்

சிரிப்புடன் கேட்டான். அவளும் பதிலுக்குச் சிரித்துக் கொண்டே மலர் சூடிய தன் குழல் அவன் பார்வையில் படும்படி ஒய்யாரமாகத் திரும்பி நின்றாள். "ஜோராக இருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே அவன் கைகால் கழுவச் சென்றான். பிறகு கூடத்திற்குச் சென்று ஸ்டூலை எடுத்துப் போட்டுக் கொண்டு படங்களுக்குப் பூமாலைகளை அதி விதரணையாகச் சாற்றினான்.

சீதாலட்சுமி வந்தாள். வருகிற போதே, "நீலா!" என்று குரல் கொடுத்துக்கொண்டே வந்து, கூடத்தை அடைந்ததும், "நேற்றைக்கு ரெயிலில் வந்த அசதியாயிற்றே என்று பேசாமல் இருந்தேன். எங்கே, வீணையை எடுத்து வைத்துக்கொண்டு இரண்டு பாட்டுப் பாடு, கேட்கலாம். சுகுமாரனுக்குப் பாட்டு என்றால் பிராணன்—உனக்கு ரோஜாப்பூவைப் போல" என்று சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"நானே அதைப்பற்றி ....." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்த சுகுமாரன் பிறகு பேச்சை மழுப்பி விட்டான்.

எங்கே உட்கார்ந்து பாடுவது என்று தியங்கி யோசித்தாள் நீலா. அதை அறிந்த சீதாலட்சுமி, "என்ன அம்மா யோசிக்கிறாய்? வெறுமனே இப்படி வந்து உட்கார்ந்து பாடு. இது பட்டணம். அதிக நாணம் இந்த ஊருக்கு ஒத்துக்கொள்ளாது" என்று சொல்லி விட்டு ஒரு விரிப்பை எடுத்துக் கூடத்திலே விரித்தாள். உடனே சுகுமாரன் போய் முன்புறத்து அறையிலே இருந்த வீணையைக் கொண்டு வந்து விரிப்பின் மீது வைத்து உறையைக் கழற்றி அதனால் வீணையின் மீதிருந்த தூசுகளைத் தட்டினான். அதைக் கண்டு சீதாலட்சுமி சிரித்தாள். நீலாவும் வாயைக் கையால் மூடிக்கொண்டு சிரித்தாள். "ஏதேது, இப்போதே இத்தனை சுசுரூஷைகள்......" என்ற சொற்கள் சீதாலட்சுமியின் வாயிலிருந்து அவளையும் அறியாமல் தெறித்துவிட்டன. உடனேயே என்ன நினைத்துக்கொண்டாளோ என்னவோ, வார்த்தைகளை அரைகுறையாகவே நிறுத்திக் கொண்டாள். தூண்டில்காரனுக்கு எதிலே கண் இருக்கும்? நீலா, சுகுமாரன் இருவர் உள்ளங்களும் சீதாலட்சுமியின் அந்த அரைகுறை வார்த்தைகளைப் பூர்த்தி செய்து அவற்றிற்கு ஏற்ற வியாக்கியானங்களையும் செய்து கொண்டன.

சுகுமாரன் சென்று சோபாவில் அமர்ந்தான். நீலா வந்து அடக்கத்துடன் வீணையின் முன் அமர்ந்தாள். அமரிக்கையாகச் சுருதியை மீட்டினாள். கீழ் நோக்காகச் சுகுமாரனைப் பார்த்தாள். 'நீங்கள் பட்டணத்திலே இருந்து கொண்டு சபாக்களில் நிறையக் கச்சேரிகள் கேட்டிருப்பீர்கள். நான் எங்கோ இருக்கிற

பட்டிக்காட்டிலே சாமான்யப் பாடகரிடம் சொற்பம் சொல்லிக் கொண்டவள். தெரிந்த வரையிலே பாடுகிறேன். குறைகள் இருந்தால் பொறுத்துக் கொள்ளுங்கள்' என்பது போன்று இருந்தன அவளுடைய தைன்யமான பார்வையும் முகபாவமும். சுகுமாரனுக்குங்கூட அவள் பாட்டைப்பற்றி மனசிலே ஓர் அலட்சிய பாவந்தான் இருந்தது. ஆனால் சற்றைக்கெல்லாம் அந்த அபிப்பிராயம் பறந்தே போய்விட்டது. தத்தித் தத்தி நடை பழகும் வெண் புறுவைப்போல வீணைத் தந்திகளிலே ஊடாடிக் கொஞ்சி விளையாடிய அவளுடைய அழகிய விரல்கள் மெல்ல மெல்லக் கல்யாணி ராகத்தை உருவாக்கத் தொடங்கினதும் அவன் திகைத்தே போனான். பல இடங்களில் அநாயாசமாக உதிர்ந்த சங்கதிகள் அவனைப் பிரமிக்க வைத்தன. தன்னையும் அறியாமல் சிற்சில இடங்களில், "ஆகா!" என்றான். இத்தனைக்கும் அவள் அந்த ராகத்தை அதிக விஸ்தாரமாகக்கூட வாசிக்கவில்லை. லேசாக வாசித்து விட்டு அந்த ராகத்திலேயே ஒரு வர்ணம் வாசிக்க ஆரம்பித்தாள். தாளக் கட்டுடன் ஜம்மென்று அமைந்த அந்த வர்ணத்திலே லயித்துப் போன அவன் அப்படியே சோபாவில் சாய்ந்து கண்ணை இறுக மூடியபடி சுஸ்வரமான அந்தச் சங்கீதத்தை அநுபவிக்கலானான். நீலா அதி உற்சாகத்துடன் வாசித்துக் கொண்டிருந்தாள். சீதாலட்சுமிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. 'குழந்தைக்குத் திருஷ்டி சுற்றிப் போடவேண்டும்' என்று எண்ணிக்கொண்டாள்.

எங்கோ வான வீதியிலே புஷ்பக விமானத்திலே பறந்து கொண்டிருப்பதுபோன்ற நிலையில் இருந்த சுகுமாரன் செவிகளில் திடீரென்று இரட்டை வீணைகள் ஒலிக்கிறாற் போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது. சட்டென்று கண்ணைத் திறந்து எதிரே நோக்கினான். நீலா வீணையோடு இழைந்து பாடிக்கொண்டிருப்பதைக் கண்டான். 'அடடா! என்ன குளுமையான சாரீரம்! உதவு பிடிகள் எத்தனை அநாயசமாக விழுகின்றன! ஒருவர் ஒன்றிலே வல்லவராக இருப்பதைக் கண்டிருக்கிறேன். என் நீலாவோ?...' என்று எண்ணிப் பூரித்தது அவன் உள்ளம்.

வர்ணம் முடிவடைந்தது. அடுத்தபடியாக மத்திம காலக் கீர்த்தனை ஒன்றை அழகு பொலியப் பாட ஆரம்பித்தாள் அவள். பிரமை பிடித்த நிலையிலே உட்கார்ந்திருந்த சீதாலட்சுமி தன்னைச் சுற்றி ஒரு முறை நோக்கி விட்டுச் சட்டென்று எழுந்தாள். குத்து விளக்கை ஏற்றினாள். சுவாமி படத்தின் எதிரே வைத்துக் குங்குமம் புஷ்பம் முதலியன சாற்றி நமஸ்கரித்தாள். மெர்க்குரி விளக்கைப் போட்டாள். கூடமெல்லாம் பூரண சந்திரனின் தண் கிரணத்தை யொத்த குளுமையான ஒளி நிறைந்தது.

அங்கே இருந்த பொருள்களெல்லாம் ஒரு புதிய சோபையைப் பெற்றுப் பளபளவென்று மின்னின.

கண்ணை மூடியபடி சோபாவிலே சாய்ந்து கிடந்த சுகுமாரனுக்குத் திபம் ஏற்றியானது தெரியும். எனினும் அவன் கண்ணைத் திறக்கவில்லை; நேராக நிமிர்ந்து உட்காரவில்லை. உள்ளத்தை அதன் போக்கிலிருந்து திருப்ப அவன் விரும்பவில்லை. இசையிலே அப்படி லயித்துக் கிடந்தான் அவன்.

மத்திம காலக் கீர்த்தனைக்குப் பின் மீண்டும் அவள் ஒரு ராகத்தை எடுத்தாள். சுகுமாரனின் உள்ளம் வியப்பிலே மூழ்கிற்று. 'மனஸ்தத்துவம் அறிந்தவளோ இவள்!' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டான். அவனுக்கு ராகங்களுள் மிகமிகப் பிடித்தமானது நீலாம்பரி. அவள் பாடினதும் அதுதான்.

கல்யாணியைப் போல லேசாகத் தொட்டு விட்டுவிடாமல் சற்று விஸ்தாரமாகவே அந்த ராகத்திலே சஞ்சாரம் செய்தாள் அவள். சிற்சில இடங்களில் வெகு லாகவமாக விழுந்த அபூர்வமான சங்கதிகளைக் கேட்டபோது அவன் உள்ளம் பரவசம் எய்தியது. அவள் பிறந்து வளர்ந்த ஊர், வயசு முதலியவைகளோடு அவள் சங்கீதத் திறமையை ஒப்பிட்டுப் பார்த்தபோது அது அவளுக்கு வரப் பிரசாதம் என்றே அவனுக்குத் தோன்றிற்று. அவன் இவ்வாறு அவளைப் பற்றியும் அவள் சங்கீதத்தைப் பற்றியும் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலேயே அவள் ராக ஆலாபனையை முடித்து விட்டுக் கணீரென்று ஒரு பாட்டை ஆரம்பித்தாள். 'இன்றே சுதினம்' என்ற அந்தப் பாட்டின் முதலடி அவனைத் தட்டி எழுப்பி விட்டது. சட்டென்று கண்ணைத் திறந்தான். 'இப்போது நாம் இருக்கும் இடம் பூலோகந்தானா?' என்ற ஐயம் கொண்டவனைப்போலக் கண்ணை மலர்த்தி நாற்புறமும் நோக்கினான். ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்த மெர்க்குரி விளக்கின் வர்ண ஒளியிலே நீலப்பட்டாடை தரித்து, வைர ஆபரணங்கள் சுடர்விட்டுப் பிரகாசிக்க, குழலிலே ரோஜாப் புஷ்பம் குலுங்க, கரத்திலே வீணை ஏந்தி, தக தக வென்று பொற் பதுமைபோல அமர்ந்திருந்த நீலாவின் அழகிய தோற்றம் அவன் உள்ளத்திலே அளவற்ற இன்பத்தைப் பொழிவதாக இருந்தது. 'நீலா.... நீலப் பட்டுப் புடைவை...... நீலாம்பரி...ஆகா! என்ன பொருத்தம்! என்ன பொருத்தம்!' என்று முழக்கிற்று அவன் உள்ளம்.

நடையில் ஏதோ சந்தடி கேட்டது. சுகுமாரன் தலையைச் சாய்த்து எட்டிப் பார்த்தான். உமாபதி நின்றிருந்தார்.

# 5. சம்மதம்

சுகுமாரனுக்கு உமாபதியைக் கண்டதும் என்னவோ போல் ஆகிவிட்டது. அவர் எப்பொழுது வந்தார், எவ்வளவு நேரமாக அங்கே நின்றிருக்கிறார் என்பன வெல்லாம் புரியாமல், தான் அட்டகாசமான முறையிலே சோபாவில் அமர்ந்து நீலாவின் பாட்டை ரசித்துக்கொண்டிருந்ததை எண்ணிக் கிலேசப்பட்டுக் கொண்டான் அவன். ஆனால் சற்றைக் கெல்லாம் அவன் பயம் மாயமாய் மறைந்து போய்விட்டது.

உமாபதி சிரித்த முகத்துடன் உள்ளே வந்தார். சீதா லட்சுமி எழுந்து நின்றாள். நீலாவும் வீணையை வைத்துவிட்டு எழுந்திருக்கப் போனாள். உமாபதி சட்டையைக் கழற்றி விட்டுச் சோபாவில் உட்கார்ந்தார். "உம் உம். கச்சேரியை நிறுத்த வேண்டாம், தொடர்ந்து நடக்கட்டும்" என்றார். சுகுமாரன் பக்கம் திரும்பி, "உட்கார் சுகுமார்" என்றார். அவன் அவர் உட்கார்ந்திருந்த சோபாவுக்குப் பின்னால் கிடந்த ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டான். சீதாலட்சுமி கணவரைச் சமீபித்து, "காபி கொண்டு வரட்டுமா?" என்றாள். அவர் வேண்டாம் என்று சைகை செய்தார். பிறகு அவள் அவர் போய் வந்த காரியங்களைப்பற்றி ஏதோ கேட்க ஆரம்பித்தாள். "எல்லாம் அப்புறம் ஆகட்டும்" என்று அவளிடம் சொல்லி விட்டு நீலாவை நோக்கி, "ஏன் அம்மா, வெகு நாழிகையாகப் பாடிக்கொண்டிருக்கிறாயா? சிரமமாக இருக்கிறதா? இல்லை யானால் எனக்காக இன்னும் ஒன்று பாடு" என்றார். நீலா சந்தோஷத்துடன் உட்கார்ந்து பாட ஆரம்பித்தாள். உமாபதி அவள் தோற்றத்தையும் பாடும் முறையையும் கண்டு மனசுக் குள் அளவற்ற மகிழ்ச்சி கொண்டார். அந்தப் பாட்டு முடிந் ததும் அவரே, "போதும் அம்மா. சிரமமாக இருக்கும்" என்றார். நீலா வீணையை மூடிவிட்டு எழுந்தாள். உமாபதி சீதாலட்சுமியிடம் தாம் சென்று வந்த காரியங்களைப்பற்றின விவரம் உரைத்தார். கும்பகோணத்திற்கு அருகே உள்ள குமாரபுரந்தான் அவருடைய பூர்வீகக் கிராமம். பிதுரார்ஜித மாக அங்கே அவருக்குச் சாமான்யமான ஒரு வீடும் சொற்ப நிலமுந்தான் ஏற்கனவே இருந்தன. பின்னர் வருஷத்திற்குக் கொஞ்சமாக நிலம் வாங்கத் தொடங்கினார் அவர். இப்போதும் நில சாசன சம்பந்தமாகத்தான் அவர் அங்கே போய் வந்தார்.

மனைவியிடம் எல்லாம் சொல்லி முடித்த உமாபதி சுகுமார னைப் பார்த்துக் கல்லூரி விஷயமாக ஏதேதோ கேள்விகள் கேட்டார். பிறகு அவன் படிப்பு விஷயமாகவும் அவனுடைய

குடும்பத்தாரின் யோக க்ஷேமங்களைப்பற்றியும் பேசினார். கடைசியாக, "ஏற்கனவே நான் சொல்லிக்கொண்டிருந்தபடி நீலாவை மேலே படிக்க வைக்க அழைத்து வந்திருக்கிறேன். அத்துடன் வீணையும் பாட்டும் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். பக்கத்துத் தெருவிலே உள்ள வீணை வரதராஜ ஐயங்காரைக் காலையில் இங்கே அழைத்து வா" என்றார். சற்றுப் பொறுத்து உள்ளடக்கிய சிரிப்புடன், "வீணை சொல்லித்தர வரதராஜ ஐயங்காரை ஏற்பாடு செய்து விடலாம். படிப்புச் சொல்லிக்கொடுக்க ஒரு வீட்டு வாத்தியார் வேண்டுமே, யாரைத் திட்டம் செய்யலாம்?" என்று அவனைக் கேட்டார். அந்தக் கேள்விக்கு என்ன பதிற் சொல்வது என்று புரியாமல் திருதிருவென்று விழித்தான் அவன். பிறகு, "ஏன், நீங்களே......" என்று இழுத்தான்.

"அது அவ்வளவாகச் சுவாரஸ்யப்படாது சுகுமார். எனக்கு ஒன்று தோன்றுகிறது. உனக்குச் சாயங்கால வேளைகளிலேதான் நிரம்ப ஓய்வு நேரம் இருக்கிறதே. நீயே அவளுக்குப் பாடங்களைச் சொல்லிக்கொடேன்" என்றார். சுகுமாரனுக்கு அப்போது உள்ளுக்குள் ஏற்பட்ட சந்தோஷத்தை அளவிட்டுக் கூறவே முடியாது. என்றாலும் மனத்தில் நிறைந்த உணர்ச்சியை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், பதில் எதுவும் சொல்லாமல் நின்றிருந்தான் அவன்.

"ஏன்? என்ன யோசிக்கிறாய்? உன் நேரம் வீணாகிவிடுமே என்று நினைக்கிறாயா? அல்லது உன் அந்தஸ்துக்கு ஒரு பெண்ணுக்கு வீட்டுப் பாடம் சொல்லித் தருவது கௌரவக் குறைவு என்று எண்ணுகிறாயா?" என்று உமாபதி கேட்டதும் சுகுமாரன் பரபரப்புடன், "அடாடா! நான் அப்படியெல்லாம் ஒன்றும் எண்ணவே இல்லையே!" என்றான்.

"அப்படியானால் உனக்கு ஆட்சேபணை இல்லையே?"

"இ...ல்...லை..."

"சரி. நீ போகலாம். காலையில் ஐயங்காரை அழைத்துவா."

சுகுமாரன் தலை நிமிர்ந்தான். சீதாலட்சுமியை நோக்கி, 'வருகிறேன்' என்கிற பாவனையில் முகத்தை அசைத்தான். அவளுக்கு அப்பால் நின்றிருந்த நீலாவைப் பார்த்தான். 'நான் வருகிறேன்' என்றன அவன் கண்கள். அவளும் மௌன பாஷையிலே விடை தந்தாள். அவன் சென்றான்.

"ஏன் சீதாலட்சுமி, என் ஏற்பாடுகள் சரிதானே?"

"சரிதான். ஆனால் நீலா என்ன சொல்கிறாளோ!" என்று சொல்லிவிட்டு அர்த்த புஷ்டியுடன் அவளைப் பார்த்தாள் சீதாலட்சுமி. நீலா தலை கவிழ்ந்தாள்.

"அவள் என்ன சொல்லப் போகிறாள்? இந்தப் பட்டணம் பூராவிலும் தேடிப் பார்த்தாலும் சுகுமாரனைப்போல யோக்கியனான பையனைக் காண்பது அபூர்வம். இந்த இரண்டு நாட்களில் அவள் அவனைப் பற்றி நன்கு தெரிந்துகொண்டிருப்பாளே!... ஏன் நீலா?" என்று கேட்டுக்கொண்டே அவள் முகத்தை நிமிர்ந்து பார்த்தார் அவர். அவள் அங்கே நின்று சமாளிக்க மாட்டாதவளாய் வீணையைக்கொண்டு போய் வைக்கும் வியாஜத்தில் அப்பாற் சென்றாள். உமாபதியின் திட்டம், அதனுள் புதைந்து கிடக்கும் ஆழ்ந்த கருத்து அவள் உள்ளத்தை அவ்வளவு தூரத்திற்கு நெகிழ வைத்துவிட்டது. 'சுகுமாரன் எனக்கு என்னத்தைப் படிப்புச் சொல்லிக் கொடுக்கப் போகிறார்!' என்று மனசோடு சொல்லிக்கொண்டு சிரித்தாள். 'நினைத்தது ஒன்று, நடந்தது ஒன்று, நடப்பது ஒன்று, நடக்கப் போவது...உம் பார்க்கலாம்' என்றது அவள் உள்ளம்.

மறுநாட் காலையில் சுகுமாரன் வீணை வித்துவான் வரதராஜ ஐயங்காரை அழைத்து வந்தான். அவர் நீலாவின் வாசிப்பையும் பாட்டையும் கேட்டு விட்டு உமாபதியிடம் மிக மிகப் புகழ்ந்து கூறினார். கடைசியில் தாழ்ந்த குரலில், "குழந்தையின் எதிரே அதிகம் சொல்லக்கூடாது. இவள் சாமான்யப் பெண் அல்ல. இல்லாவிட்டால் இந்த வயசிலே இத்தனை வித்துவத்துவம் ஏற்பட நியாயம் இல்லை. சுகுமாரன் வந்து சொன்னதும் நான் என்னவோ சாமான்யமாக நினைத்தேன். இப்போது என்ன தோன்றுகிறது தெரியுமோ? பணம் காசு எதுவுமே வேண்டாம்; இவளுக்குச் சொல்லித் தருவதே பெரிய பாக்கியம் என்று எண்ண வேண்டி இருக்கிறது......" என்றார்.

மறுநாள் முதல் அவர் நீலாவுக்குப் பாடம் கற்பிப்பது என்று முடிவாயிற்று. காலையில் இசைப் பயிற்சி. மாலையில் படிப்பு. இடையே பள்ளிக்கூடம். ஒழிந்த நேரங்களில் லேசான வீட்டுக் காரியங்கள். ஞாயிறன்று முழு லீவு. அன்று உமாபதி, சீதாலட்சுமி, சுகுமாரன், நீலா நால்வருமாகக்கூடி எங்காவது சினிமா, நாடகம், பாட்டுக் கச்சேரி, கடற்கரை, கோயில், குளம் என்று போய் வருவது; அல்லது வீட்டிலே உட்கார்ந்து அரட்டை அடிப்பது—இப்படி வெகு உல்லாசமாகப் போய்க் கொண்டிருந்தது அவர்கள் காலம். இந்தத் திட்டங்கள் அமலுக்கு வந்ததிலிருந்து நால்வர் உள்ளத்திலும் ஒரு நிறைவு ஏற்பட்டு எப்போதும் அவர்களைச் சந்தோஷத்துடன் இருக்கச் செய்தது. சுகுமாரன் நீலாவிடம் மற்ற வேளைகளில் ஜாடைமாடையாக ஏதாவது விளையாட்டாகப் பேசுவானே தவிர அவளுக்குப் பாடங் கற்பிக்க என்று உட்கார்ந்துவிட்டால் வேறு மனிதன்

போல் ஆகிவிடுவான். அவளும் அதே முறையிலேதான் நடந்து கொண்டாள். உமாபதி அல்லது சீதாலட்சுமி இருவரில் ஒருவர் பெரும்பாலும் பாடம் நடக்கிறபோது வீட்டிலே வளைய வந்து கொண்டிருந்ததால் அவர்கள் அப்படி நடந்துகொள்ளும் முறைக்குப் பங்கம் விளைய ஏது இல்லாமல் இருந்தது. தப்பித் தவறி என்றுவது ஒருநாள் பெரியோர் இருவரும் அங்கே இங்கே போயிருந்தாலோ அன்று பாடமே இராது. வம்பும் வாதமும் சிரிப்பும் கேலியுமாக ஒரே அமளிதான். அப்படி ஒருநாள் தனிமையில் இருந்தபோது சுகுமாரன் சொன்னுன் :

"நீலா, அன்று நீ பாடினுயே, பாட்டு; அது இன்னமும் என் காதுகளிலே இனிமையாக ஒலித்துக்கொண்டே இருக்கிறது. நீலா, நீ பாடின நேரத்தைச் சொல்வதா, பாடின முறையைச் சொல்வதா, தேர்ந்தெடுத்த ராகத்தைச் சொல்லவா, அந்த அற்புதமான சாகித்தியத்தைச் சொல்லவா, உன் குரல் இனிமையை சொல்வதா, உன் சங்கீத ஞானத்தைச் சொல்வதா ? எல்லாவற்றையும்விட நீ உட்கார்ந்து பாடின அழகைச் சொல்லவா? நீலா, உன் பெயர் நீலா. அன்று நீ அணிந்திருந்தது நீலப் பட்டுப் புடைவை. பாடினது நீலாம்பரி. ஆகா! என்ன பொருத்தம்! என்ன பொருத்தம்! அம்பரம் என்றுல் ஆடை. நீல அம்பரம்- நீலப் பட்டுப் புடைவை! பாடினதும் நீலாம்பரி! இத்தனைக்கும் மேலாக ஒரு விஷயம். எனக்கு ராகங்களுள் மிகப் பிடித்தமானது நீலாம்பரிதான். என் இருதயத்தில் உள்ள ஆசையை அறிந்து கொண்ட முறையில் நீ அந்த ராகத்தைப் பாடினதற்கு நான் உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன் ? அன்றிலிருந்து நான் உன் பெயரையே மாற்றியமைத்துக் கொண்டுவிட்டேன். என் வரையில் நீ வெறும் நீலா இல்லை; நீலாம்பரி!......"

பித்தங் கொண்டவன்போல அவன் படபடவென்று பொறிந்து தள்ளுவதைக் கண்டு அவள் லேசாகப் புன்முறுவல் கொண்டாலும் அவன் இருதயக் கொந்தளிப்பின் எதிரொலியாக அவள் உள்ளமும் கொந்தளிக்கத்தான் செய்தது. இருந்தும் வழக்கமான தோரணையில் பேச ஆரம்பித்தாள்.

"உங்கள் இஷ்டத்திற்கு என் பெயரை மாற்றிவிட்டீர்கள்!"

"ஆம் நீலா. எனக்கு அத்தகைய உரிமை கிடைக்கும் என்றுதான் நினைக்கிறேன். நீ என்ன சொல்கிறுய் ?"

"நான் என்னத்தைக் கண்டேன் ?"

"ஏன் நீலா அப்படிச் சொல்கிறுய் ?"

"பின் எப்படிச் சொல்வதாம் ? பெரியவர்கள் பார்த்துச் செய்ய வேண்டிய காரியங்களில்......"

"பெரியவர்களைப்பற்றி எனக்குக் கவலையே இல்லை. என் அம்மாவும் அண்ணுவும் என் இஷ்டத்திற்கு விரோதமாக நடந்து கொள்ளமாட்டார்கள். உன் மாமா, மாமி இருவர் சொல்லையும் உன் பெற்ருேர் தட்டமாட்டார்கள் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. உன் மாமாவும் மாமியும் என் விஷயத்திலே நான் எதிர்பார்க்கிறபடியேதான் நடந்து கொள்வார்கள் என்பதும் எனக்குத் தெரியும். முக்கியமாக நான் தெரிந்துகொள்ள வேண்டியதெல்லாம் உன் மனநிலை ஒன்றுதான்."

நீலா சிரித்தாள். "பேஷ்! சற்று நேரத்திற்குள் வாயாலேயே ஒரு கல்யாணத்தை நடத்தி முடித்துவிட்டீர்களே!..." என்ருள்.

"ஆம் நீலா. எனக்கு என்னவோ பெரியவர்கள் விஷயம் சரிப்பட்டுவந்துவிடும்என்பதிலே அசைக்க முடியாத நம்பிக்கை."

"சின்னவர்கள் விஷயந்தான் மட்டுப்படவில்லையாக்கும்?"

"ஆம். உன்...மன...நிலை......"

"அதில் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது இன்னும் என்ன பாக்கி இருக்கிறது?"

"ஒன்றும் இல்லையா? உனக்குப் பூரண சம்மதந்தாஞ?"

"இது என்ன கேள்வி?"

சுகுமாரன் உள்ள நிறைவுடன் பெருமூச்செறிந்தான். நடையிலே காலடி ஓசை கேட்டது.

"நீலா!......" என்று கூப்பிட்டுக்கொண்டே சீதாலட்சுமி உள்ளே வந்தாள். சுகுமாரன் கூடத்திலே நின்று பெரிய கடிகாரத்திற்குச் சாவி கொடுத்துக் கொண்டிருந்தான். "காபி சாப்பிட்டாயா சுகுமாரா? நீ வந்து ரொம்ப நேரம் ஆயிற்ரு? நீலா எங்கே காணும்?" என்று கேள்விகளை அடுக்கிக் கொண்டே சமையற்கட்டில் நுழைந்த சீதாலட்சுமி அடுப் படியிலே ஏதோ அலுவலைக் கவனிப்பது போல் நடித்துக் கொண்டிருந்த நீலாவிடம் சென்று, "சுகுமாரனுக்குக் காபி கொடுத்தாயா? அவன் ஒரு சங்கோசப் பிராணி. காபி சாப்பிட் டாஞே?" என்ருள்.

"ஏதேது? பெற்ற தாய்கூட இத்தனை கரிசனமாக இருப் பார்களா என்று சந்தேகிக்கும்படி இருக்கிறதே!" என்று நீலா சிரித்துக்கொண்டே சொன்னுள்.

"என்னவோ அம்மா. அப்படித்தான் ஒரு பாசம் ஏற்பட்டுவிட்டது எங்களுக்கு, அவனிடம்......."

சீதாலட்சுமியின் குரல் தழுதழுத்தது. தொண்டை அடைத்துக் கொண்டது. கண்களில் நீர் மல்கிற்று. உள்ளே நடைபெறும் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த சுகு மாரன் உள்ளத்திலும் பாச உணர்ச்சி அலை மோதிற்று.

# 6. வெறியும் நெறியும்

ஒரு நாள் மாலை ஐந்து மணி இருக்கும். வீட்டில் நீலா வைத் தவிர யாரும் இல்லை. சுகுமார் வெளியிலிருந்து வந்தான். இரண்டு மூன்று நாட்களாகவே அவன் மனம் நிலை பிறழ்ந்து தத்தளித்துக் கொண்டிருந்தது. அன்று அவன் உள்ளக் கொந் தளிப்பு உச்ச நிலையில் இருந்தது. அதற்கு ஏற்றாற்போல நீலா கூடத்தில் இருந்த மேஜை அருகில் நின்று சினிமாப் பாட்டு ஒன்றை மெல்ல முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

'சுகுமாரா என்தாபம் தனை நீ அறியாயோ மாரா'

சுகுமாரன் சந்தடி செய்யாமல் அருகே சென்றான். அவள் சுவாமி படத்தில் தெரிந்த நிழலாட்டத்திலிருந்து அவன் வரு கையை அறிந்து கொண்டாள். அவன் அவள் கண்களைப் பொத்த முயன்றான். அவள் சட்டென்று அப்பால் நகர்ந்துகொண்டாள். அவள் உடம்பு குப்பென்று வேர்த்துவிட்டது; கிடுகிடென்று ஆடிற்று. முகத்தில் விதிர்ப்பின் சாயை தென்பட்டது.

"இதென்ன நீலா இப்படித் துள்ளிக் குதிக்கிறாய்? யாரோ என்னவோ என்று பயந்துவிட்டாயா? யாராவது வந்து உன்னி டம் இத்தனை சுவாதீனத்துடன் நடந்து கொள்வார்களா?"

அவள் திணறலான மூச்சுடனேயே சற்றுக் கண்டிப்பான குரலில் படபடவென்று பேசினாள்.

"யாரோ என்னவோ என்று எண்ணி அரண்டு விடவில்லை. நீங்கள்தான் என்று முன்பே தெரிந்துகொண்டேன். நீங்கள் மாத்திரம் இத்தனை சுவாதீனம் கொண்டாடலாம் என்று யார் சொன்னது?"

சுகுமாரன் திடுக்கிட்டுப் போனான்.

"ஏன் நீலா இப்படியெல்லாம் பேசுகிறாய்? என் பேரில் கோபமா?"

"கோபம் என்று யார் சொன்னது?"

"உன் முகம் சொல்லுகிறது; பேச்சு சொல்லுகிறது; நீ நடந்து கொள்ளும் முறை சொல்லுகிறது?"

"நீங்கள் நடந்து கொண்ட முறை மட்டும் சரி என்று உங் கள் மனச்சாட்சி சொல்லுகிறதா?"

"தவறாக என்ன செய்துவிட்டேன்?"

"இன்னும் என்ன செய்தால் தவறு என்று உங்கள் அக ராதியில் இருக்கிறது?"

"விளையாட்டாகக் கண்ணைப் பொத்த வந்ததற்கு இத்தனை ரகளையா? வேடிக்கையாக இருக்கிறதே!"

"உங்களுக்கு வேடிக்கைதான். எனக்கு அப்படி இல்லை."

"உம்...அப்படியானால் உன் பாட்டுக்கு என்ன அர்த்தம்? உன் கண்ணைப் பின் யார்தான் பொத்தலாம்? அதையாவது கொஞ்சம் விளக்கமாகச் சொல்லேன்."

"விளக்கம் என்ன? அந்த உரிமை ஸ்ரீமான் சுகுமார் ஒருவருக்குத்தான் உண்டு. ஆனால்...எப்போது?"

"பூ! என்னடா அப்பா என்று பார்த்தேன். அதுதான் நாமெல்லாம் ஒரு முடிவுக்கு வந்து நம் இருவர் மனமும் ஒருமனமாகிவிட்டதே! இனி ஊரறியும் சடங்கு ஒன்றுதானே பாக்கி?"

"உங்களுக்கு அது சாமான்யம். எனக்கு அதுதான் முக்கியம்."

"என்னிடம் உனக்கு நம்பிக்கை இல்லை என்றுதான் ஆகிறது."

"அப்படி நீங்களாகக் கற்பனை செய்து கொண்டால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்?"

"என்னவோ நீலா, நீ பேசுவது உனக்குத்தான் நன்றாக இருக்கிறது. என்னுடையவள் என்று ஆகி விட்டவளைத் தீண்டிக் கண்ணைப் பொத்தக் கூட...."

"அது சரி; இன்றைக்குக் கண்ணைப் பொத்துவீர்கள்; நாளைக்குக் கன்னத்தைக் கிள்ளுவீர்கள்; இன்னொரு நாள் முதுகிலே தட்டிக் கொடுப்பீர்கள். உங்கள் விளையாட்டுப் பொம்மையாகவே நான் பேசாமல் இருந்து கொண்டிருந்தால் நீங்களும் மனம் போனபடியெல்லாம் விளையாடிக் கொண்டே போவீர்கள். ஆனால்..."

"உம். ஆனால்?"

"நான் இருந்தது கிராமமானாலும் அருகே உள்ள நகரத்திலே வாசகசாலை இருக்கிறது; சினிமாக் கொட்டகை இருக்கிறது. நிரம்ப நாவல்கள் படித்திருக்கிறேன்; சினிமாக்கள் பல பார்த்திருக்கிறேன். இப்படிப்பட்ட நாடகங்களின் முடிவு..."

"என்னவோ நீலா, உனக்குத்தான் இப்படிப்பட்ட சந்தேகங்களெல்லாம் மனத்தில் எழுகின்றன. என் வரையில்..."

"ரொம்ப சந்தோஷம். அப்படித்தான் இருக்கவேண்டும். என்பேரில் வருத்தப் படாதீர்கள். கிணற்று நீரை வெள்ளமா கொண்டு போய்விடும்? நீலா என்றும் உங்களுடையவள்தான். உரிய காலம் வரும் வரையில் காத்திருப்போம்"—

சுகுமாரன் மௌனமாக வெளியே சென்றான்.

அப்போதைக்கு அவள் பேச்சு சிறிது ஆயாசத்தைக் கொடுத்தாலும் அப்பால் நன்கு யோசித்துப் பார்த்தபோது அவள் கூறிய மொழிகளின் உட்கருத்திலே நிறைந்து கிடக்கும் நேர்மையும் மேன்மையும் அவன் உள்ளத்திலே ஒரு நிறைவை உண்டு பண்ணின.

# 7. பிறந்த நாள் பரிசு

ஒரு வாரத்திற்குப் பின் ஒருநாள் மாலை. சுகுமாரன் பாடம் சொல்ல வந்தான். நீலா அவனிடம் சென்று சற்று நேரம் கண் இமைக்காமல் அவனையே பார்த்துக்கொண்டு நின்றிருந்தாள். அவளுடைய ஒவ்வொரு செயலிலும் பல்வேறு பொருள்களை வியாக்கியானஞ் செய்து கொண்டு அவஸ்தைப்படும் சுபாவத்துக்கு அடிமையாகிவிட்ட அவன் அவளை ஏறிட்டுப் பார்த்து, "என்ன நீலா? என்ன விசேஷம்?" என்ருன்.

"ஏதாவது விசேஷம் இருந்தால் தான் உங்களிடம் வரலாம் போல் இருக்கிறது?"

"அடே யப்பா! ஒரு பெண்ணுக்கு ஆனுலும் இத்தனை வாய் கூடாது. பேச்சுக்குப் பேச்சுத் தப்பு எடுக்கிருயே?"

அவள் கல கலவென்று சிரித்தாள்.

"ஒரு விசேஷத்தைச் சொல்லத்தான் வந்தேன்; சொல் லட்டுமா?"

"உன் இஷ்டம். சொல் என்ருல் மாட்டேன் என்பாய்; வேண்டாம் என்ருல் சொல்லியே தீர்ப்பாய்."

"அப்பாவிடமிருந்து இன்று கடிதம் வந்திருக்கிறது."

"என்ன? பெண்ணுக்குக் கல்யாண ஏற்பாடு ஏதாவது......"

"உங்களுக்கு எப்பொழுது பார்த்தாலும் அதுதானே ஞாபகம்? அவர் அதெல்லாம் எழுதவில்லை. வெறுமனே யோக க்ஷேமத்தைப்பற்றித்தான் எழுதி இருக்கிருர்."

"ஓகோ! உங்கள் குடும்பத்திலே யோக க்ஷேமங்களைக் குறித்து ஒருவருக்கொருவர் கடிதம் எழுதிக்கொண்டால் அது ஒரு விசேஷமாக்கும்?"

"விசேஷமும் இருக்கிறது. வருகிற வெள்ளிக்கிழமையன்று நான் பதினைந்தாம் படியிலே அடியெடுத்து வைக்கிறேன். ஒவ்வொரு வருஷமும் என் பிறந்த நாளன்று ஆயுஷ்யஹோமம் செய்து கோயிலுக்குச் சென்று சுவாமிக்கும் அம்மனுக்கும் அர்ச்சனை செய்துகொண்டு வருகிற வழக்கம். அதெல்லாம் மாமாவுக்கும் தெரியுமாகையால் அதன்படி செய்யவேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்திவிருக்கிருர்."

"அப்புறம்."

"அப்புறம் என்ன? இது என்ன, ஏதாவது கதையா?"

"இதில் விசேஷம் என்ன இருக்கிறது?"

"ஒன்றும் இல்லையா?"

"எனக்கு ஒன்றும் தெரியவில்லையே?"

அவள் முகம் மாறிற்று. "அப்படியானால் நான் போகிறேன்" என்று திரும்பினாள்.

"போகாதே நீலா. நீ என்ன சொல்ல வந்தாய் என்று கொஞ்சம் எனக்குப் புரியும்படி சொல்லிவிட்டுப் போ."

"ரசிக்காது."

"ஏன்?"

"நீங்களாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும்."

"உன் எதிரில்தான் என் மூளை மழுங்கிப் போய் விடுகிறதே!"

"முகஸ்துதி செய்யமட்டும் தெரிகிறது; ஒரு பெண் வந்து தனக்குப் பிறந்த நாள் என்று சொன்னால் என்ன செய்ய வேண்டும் என்று புரிந்து கொள்ளமட்டும் தெரியவில்லை."

"ஓ! இப்போது புரிந்துவிட்டது; நன்றாகப் புரிந்துவிட்டது."

"என்ன?"

"பிறந்த நாள் பரிசு!"

"என்ன கொடுக்கப் போகிறீர்கள்?"

"உனக்கு என்ன வேண்டும்?"

அவள் ஒரு கணம் சலனமற்று நின்றாள். பிறகு, "உங்களுடைய பொன்னான மனசைக் கொடுங்கள்" என்றாள்; சிரித்துக் கொண்டே.

"அதைத்தான் நீ என் அநுமதியின்றி என்னிடமிருந்து முன்பே எடுத்துக் கொண்டு விட்டாயே! வேறு ஏதாவது......"

"நான் குறிப்பிட்டுக் கேட்பதில் பிரயோசனம் இல்லை. நீங்களாகச் செய்ய வேண்டும்."

"சரி; செய்கிறேன்."

"என்ன செய்யப் போகிறீர்கள்?"

"அதை ஏன் நீ கேட்கிறாய்?"

"நீங்கள் பாட்டுக்கு எதையாவது......"

"அப்படியெல்லாம் இல்லை. உனக்கு மிக மிகப் பிடித்தமான பொருள் தான்."

"என்ன என்று சொல்லப் படாதா?"

"ஊஹூம். பாரேன், அன்றைக்கு."

சீதாலட்சுமி உள்ளேயிருந்து குரல் கொடுத்தாள். "இதோ வந்தேன் மாமி" என்று உள்ளே ஓடினாள் நீலா. சுகுமாரன் சிந்தனை வசமானான். அவள் காபியுடன் திரும்பி வந்தாள். பிறகு பாடம் ஆரம்பமாயிற்று.

# 8. தங்க ரோஜா

வெள்ளி பிறந்தது. நீலாவுக்குப் பதினைந்தாவது வயது பிறந்தது. ஊரில் இருந்திருந்தால் அவள் பெற்றோர் அந்த நாளை எப்படிக் கொண்டாடுவார்களோ அதைவிடப் பன் மடங்கு உற்சாகத்துடனும் விமரிசையுடனும் சீதாலட்சுமியும் உமாபதியும் கொண்டாடினார்கள். சிவந்த மேனிக்குக் கிளிப் பச்சை வர்ணம் எடுப்பாக இருக்கும் என்று அந்த வர்ணத்திலே விலையுயர்ந்த பட்டுப் புடைவையும் அதற்கேற்ற ஜம்பரும் வாங்கியிருந்தார்கள். அவற்றை அணிந்து மண மலர் சூடி மந்த ஹாசத்துடன் அவள் நடமாடியது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

மாலை நேரம் நெருங்க நெருங்க நீலாவின் உள்ளம் ஒரு பரபரப்பை அடைந்து நிலைகொள்ளாமல் தவிக்க ஆரம்பித்தது. சோதனை போல இரண்டு நாட்களாகச் சுகுமாரன் அங்கே வர வில்லை. அவன் மும்முரமாகப் பரீட்சைக்குப் படித்துக் கொண் டிருந்தான். அவனைக் காணோமே என்று இவள் இங்கே தவித் தாள்; இவளைக் காண வரமுடியவில்லையே என்று அவன் அங்கே தவித்துக்கொண்டிருந்தான். 'பிறந்த நாள் பரிசுகூட ஏதோ தருவதாகச் சொன்னாரே, அப்படிப்பட்டவர் இன்றைப் பொழுதுக்குள் வந்து முகத்தைக் காட்டாமல் கூடவா இருந்து விடுவார்? கையிலே பணவசதி இல்லையோ என்னவோ! இல்லாவிட்டால் ஏதுக்கு வீணாகச் சிரமப்படவேண்டும்? நான் வெறுமனே விளையாட்டுக்குத் தானே கேட்டேன்? பரிசும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம். பெரிய பரிசாக அவரே எனக்குக் கிடைக்க இருக்கிறபோது மற்ற எதுதான் பிரமாதம்? இந்த நாளில் அவரைத் தரிசிக்க வேண்டும். ஒரு நமஸ்காரம் செய்யவேண்டும். அவர் என்னை மனங்குளிர, கண்குளிரப் பார்க்க வேண்டும். இதுவே என் ஆசையெல்லாம்'—என்று மன சோடு புலம்பியவண்ணம் இருந்தாள் அவள்.

விளக்கேற்றும் நேரம். உமாபதி இன்னும் வெளியிலிருந்து வரவில்லை. சீதாலட்சுமி உள்ளே கோயிலுக்குச் செல்வதற்காக அர்ச்சனைச் சாமான்களை எடுத்து வைத்துக்கொண்டிருந்தாள். நீலா சுவாமி படத்தின் எதிரே குத்துவிளக்கைக்கொண்டு வந்து வைத்து ஏற்றினாள். சுவாமியை நமஸ்கரித்து எழுந்து நின்று கரங்கூப்பிப் பிரார்த்தனை செய்யத் தொடங்கினாள்.

"நீலா!......"

சட்டென்று திரும்பிப் பார்த்தாள் அவள். வேண்டிய தெய்வம் வரமருள நேரில் வந்ததுபோல முன்னிடைத் தாழ்வாரத்திலே புன் முறுவலுடன் நின்றிருந்தான் சுகுமாரன். தாய்ப் பசுவைக் கண்ட கன்று தாவிக் குதித்து ஓடுவது போலத் துள்ளிக் கொண்டு அவனிடம் சென்றுள் நீலா. அவளுடைய அழகிய தோற்றத்திலே லயித்துப் போய்ச் சிலைபோல் நின்றிருந்த சுகுமாரனின் கண்கள் இமைக்காமல் அவள் எழிலுருவையே நோக்கின.

" இப்படிச் செய்யவேண்டும் என்று எத்தனை நாட்களாகத் தீர்மானித்து வைத்திருந்தீர்கள்? உங்களோடு பேசவே கூடாது என்று இருந்தேன். நேரிலே கண்டதும் பாழும் மனசு கேட்கவில்லை......" என்று சொல்லிக் கொண்டே அவன் சமீபம் சென்றவள் அவன் கையில் இருந்த பொட்டணத்தைப் பார்த்ததும் மலர்ந்த முகத்துடன் கொஞ்சிய மொழிகளில், "இப்படிக் கொடுங்கள்" என்று சொல்லிக் கொண்டே கையை நீட்டினுள். அழகிய அந்தக் கரத்திலே தன் கையில் இருந்த பொட்டணத்தை வைத்தான் சுகுமாரன். அவள் பரபரவென்று பொட்டணத்தைப் பிரித்தாள். உள்ளே அழகிய வெல்வெட்டுப் பெட்டி. ஆவலுடன் அதைத் திறந்தவள் அப்படியே பிரமித்துப்போனுள்.

தங்க ரோஜா! குறைந்த பட்சம் மூன்று சாவரன்கள் இருக்கும். பெறுமானம் இருக்கட்டும்; அதன் அழகிய வேலைப்பாடு! அவளுடைய மலர் முகம் நோக்கிச் சிரித்தது அந்தப் பொன் மலர். உள்ளே!... ஊன்றிக் கவனித்தாள். ஆகா! அடித்தளத்தில் சுழித்து நின்ற இதழ் ஒன்றிலே வைரக் கற்கள் டால் வீசின. அதிலும் அதிசயம்—அந்தக் கற்கள் சுகுமார் என்ற பெயரைக் காட்டின. பரிசைப் பார்த்து ரசித்த வேகத்தோடு அவன் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள் அவள். பெருமிதத்தைத் தோற்றுவித்த அவன் முகத்திலே அவள் உள்ளத்து மகிழ்ச்சியை உணர்ந்ததால் ஏற்பட்ட ஆனந்த உணர்ச்சி நிழலாடிற்று.

"ஏகப்பட்ட ரூபாய் ஆகியிருக்குமே!"

"ஏதோ ஆயிற்று. என்ன ஆனுலும் இதன் மதிப்பைக் கணக்கிட்டுக் கூறிவிடலாம். ஆனல் உனக்கு விலை மதிப்பே கிடையாதே!"

அவள் முகத்திலே செம்மை படர்ந்தது.

"முழுத் தங்கமும் நிஜ வைரமுந்தானே?"

"இல்லை. புஷ்பம் முழுத் தங்கந்தான். வைரம் மட்டும் பாலி வைரம். அசல் வைரத்திற்கான பணம் கையில் இல்லை."

"இந்தாருங்கள்."

அவன் திடுக்கிட்டுப் போனான்.

"ஏன் நீலா?"

"பிடியுங்களேன், சொல்கிறேன்."

"ஏன் என்று சொன்னால்தான்."

"ஒன்றும் இல்லை. உங்களுக்கு நமஸ்காரம் செய்யப் போகிறேன்."

"அதற்காக? அதை என்னிடம் திருப்பிக் கொடுப்பானேன்?"

"நான் நமஸ்கரித்து எழுந்ததும் நீங்கள் என் கையில் கொடுக்கத்தான்."

"ஓகோ!........"

அவன் கை நீட்டினான். அவள் அதைக்கொடுத்துவிட்டு நமஸ்காரம் செய்யக் குனிந்தாள். அப்பொது தெருவிலிருந்து, "ஸார்!" என்று குரல் கொடுத்துக் கொண்டே ஒருவர் உள்ளே வந்தார். அவர் பின்னே இரண்டு பெண்மணிகளும் வந்தனர். சுகுமாரன் சட்டென்று அந்த நகைப் பெட்டியை அவளிடம் கொடுத்துவிட்டு ஹாலுக்குச் சென்றான். நீலா உட்புறம் சென்றாள். வந்த மனிதரோடு சுகுமாரன் பேசிக்கொண்டிருக்கையிலேயே உமாபதி வந்துவிட்டார்.

அப்புறமும் ஹாலில் சற்றுநேரம் சம்பாஷணை நிகழ்ந்தது. வந்தவர்கள் விடைபெற்றுச் சென்றார்கள். உடனே உமாபதி கோயிலுக்குக் கிளம்பினார். எப்போதும் எங்கே சென்றாலும் சுகுமாரனையும் உடனழைக்கும் உமாபதி அப்போது அவனை நீயும் கோயிலுக்கு வா என்று கூப்பிடவில்லை. அது மட்டுமல்ல; சிதாலட்சுமி கூப்பிட்டதற்கும், "அவனை வீணுக்கு மெனக்கடுத்தாதே. அவனுக்குப் பரீட்சை" என்று வெடுக்கென்று கூறிவிட்டார். அவனுக்கு அவர்களோடு கோயிலுக்குப் போக ஆசைதான். நீலாவுக்கும் அவன் உடன் வர வேண்டும் என்ற அவாவிரம்ப இருந்தது. இருந்து என்ன செய்வது? உமாபதியின் தடை உத்தரவை மீற யாரால் முடியும்? பரிதாபகரமாக ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

எல்லோரும் வீட்டைவிட்டுக் கிளம்பிச் சிறிது தூரம் செல்லும் வரையில் பேசிக்கொண்டே கூடச் சென்ற சுகுமாரன் தன் அறைக்குச் செல்ல வேண்டிய வழி குறுக்கிட்டதும், "நான் வருகிறேன்" என்று கூறித் தயங்கித் தயங்கி நடந்து சென்றான். நீலாவின் உள்ளம் குறையால் நிரம்பிற்று. தன்னைச் சுற்றிச் சூனியத்தைக் கண்டாள். 'என்ன வேண்டிக் கிடக்கின்றன,

படிப்பும் பரீட்சையும்!' என்று தனக்குள் அலுத்துக்கொண்டாள். அந்த நல்ல நாளில் அவனும் தானும் ஈசுவர சந்நிதியிலே அருகருகே நின்று ஒரே சமயத்தில் ஒரே விஷயத்தைக் குறித்து ஒரு முகமாகப் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும் என்ற அவள் ஆசை பங்கமடைந்தது அவளுக்கு என்னவோ போல் இருந்தது. அதற்கு ஏற்றாற்போல அம்பிகைக்கு அர்ச்சனை நடந்துகொண்டிருக்கையில் சந்நிதியில் நின்று அவள் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தபோது அவள் பார்வையிலே நேரடியாகத் தென்பட்ட தீபம் ஒன்று எண்ணெய் இல்லாக் குறையாலோ அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ பொட்டென்று அணைந்து திரி புகைந்தது. பிறகு திரி நுனியிலே தெரிந்த சுடரும் அவிந்தது. அது நீலாவின் நெஞ்சிலே ஒரு நடுக்கத்தை உண்டுபண்ணிற்று. வீட்டைவிட்டு உற்சாகத்தோடு கிளம்பியவள் கிலேசம் நிறைந்த உள்ளத்தோடு, வாட்டமடைந்த முகத்தோடு வீட்டிற்குத் திரும்பினாள்.

அன்றிரவு அவளுக்குச் சாப்பாடு வேண்டியிருக்கவில்லை. படுத்த பின் தூக்கமும் இல்லை. மனசு ஏதேதோ குருட்டுத்தனமான நினைவுகளிலும் கற்பனைகளிலுமாகக் கிடந்து அலைபாய்ந்தது. மாலை வரையிலே பூத்துக் குலுங்கும் நந்தவனமாகக் காட்சி தந்த அவளுடைய எதிர்காலம் இப்போது பாலைவனமாகத் தோன்றிற்று. 'சீ, எதுக்காக மனசு கிடந்து இப்படி அல்லாடுகிறது? என்ன நேர்ந்துவிட்டது இப்போது? எதைக் கண்டு இப்படி எல்லாம் நடு நடுங்க வேண்டும்? தவறாக எதுவும் நேராது. எல்லாம் சரியாகவே நடக்கும்' என்று பல தடவை பல விதங்களில் அந்த மனசுக்கு அவள் சமாதானம் சொல்லித் தூங்க வைக்கப் பாடுபட்டாள். ஆனால் அந்தப் பொல்லாத மனம் அதையெல்லாம் லட்சியஞ் செய்து ஏற்றுக் கொண்டால் அல்லவோ?

அதன் பிறகும் நாலைந்து நாட்கள் வரையில் சுகுமாரன் உமாபதியின் வீட்டுப் பக்கம் எட்டியே பார்க்கவில்லை. அதனால் நீலாவின் உள்ளம் மேலும் குழப்பமும் துயரமுங்கொண்டது. 'ஆயிரந்தான் பரீட்சை இருக்கட்டும், இன்னும் முக்கியமான பல காரியங்கள் இருக்கட்டும்; இப்படியா இந்தப் பக்கம் தலை காட்டாமலே இருக்க வேண்டும்? என்ன இருந்தாலும் ஆண் நெஞ்சு கல் நெஞ்சுதான்' என்று எண்ணிக்கொண்டாள். பின்னோடு, 'அவரையும் வீணாகக் குறை கூறப்படாது. அவர் மனசு துடித்துக்கொண்டுதான் இருக்கும். வந்தால் மாமா ஏதாவது சொல்வாரோ என்ற அச்சம் இருக்கலாம்' என்று சமாதானமும் சொல்லிக்கொண்டாள்.

# 9. குழப்பம்

மேலும் இரண்டு நாட்கள் சென்றபின் ஒரு நாள் சுகுமாரன் வந்தான். அன்று அவன் வரக்கூடும் என்று அவளும் எதிர் பார்த்துக்கொண்டேதான் இருந்தாள். ஏனென்றால் முதல் நாள் மாலை உமாபதி பேச்சோடு பேச்சாக, "ஒரு வழியாகப் பரீட்சைகள் எல்லாம் இன்றோடு முடிவடைந்தன" என்று சொன்னதை அவள் கேட்டுக்கொண்டிருந்தாள்.

சுகுமாரன் வந்தபோது உமாபதி வீட்டில் இருந்தார். அதிலும் தனிமையில் இருந்தபடியால் வந்தவனை வளைத்துக் கொண்டு ஏதேதோ கேள்விகளை அடுக்கினார். சீதாலட்சுமியும் சிற்றுண்டி, காபி முதலியவற்றை அவன் இருந்த இடத்திலேயே கொண்டுபோய்க் கொடுத்துவிட்டாள். ஆகவே அவன் உள்ளே வருவதற்குப் பிரமேயமே இல்லாமற் போயிற்று. நீலா இங்கும் அங்கும் போம்போதும் வரும்போதும் ஜாடையாகச் சுகுமாரனைப் பார்த்தாள். ஏழெட்டு நாட்களாக இரவெல்லாம் கண் விழித்துப் படித்ததால் அவன் உடம்பு அரை உடம்பாகப் போய் முகம் சோர்வடைந்திருந்தாலும் அந்த முகத்திலே உற்சாகம் குன்றவில்லை; பொலிவு குறையவில்லை. அதைக் கண்டு அவள் உள்ளம் ஓரளவு திருப்தி கொண்டது. ஆனால் நீலாவின் முகம் தெளிவாக இல்லை என்பதை ஜாடைப் பார்வையிலே தெரிந்துகொண்ட சுகுமாரன், மனசுக்குள் என்ன என்னவோ எண்ணமிட்டான். அவளோடு பேசி அவள் நிலைக்குக் காரணம் இன்னதென்று அறிந்துகொள்ள வேண்டும் என்று துடித்தான். காதலர்களின் உள்ளத் துடிப்பை அறிந்து உதவ வந்தவர்களே போன்று அப்போது உமாபதியின் நண்பர்கள் நாலைந்து பேர்கள் வந்து சேர்ந்தார்கள். உமாபதி அவர்களோடு அளவளாவத் தொடங்கினதும் சுகுமாரன் மெல்ல அந்த இடத்தைவிட்டு நழுவினான். உமாபதி பேசத் தொடங்கினால் உலகத்தையே மறந்து விடுவார் என்பது அவரை அறிந்த எல்லோருக்கும் தெரியும்.

உள்ளே சென்ற சுகுமாரன் அங்கே நின்றிருந்த நீலாவைக் கண்டதும், "மாமி எங்கே?" என்று தணிவான குரலில் கேட்டான். "இன்றைக்குப் பிரதோஷமாம். சற்று முன்புதான் கிளம்பிக் கோவிலுக்குச் சென்றாள்" என்று உற்சாகமற்ற குரலில் பதில் கொடுத்தாள் நீலா.

"அது சரி, நீ ஏன் என்னவோபோல் இருக்கிறாய்? என் பேரில் கோபம்; ஆமானே? ஏழெட்டு நாட்களாக நான் இங்கே

வரவில்லை என்று தானே கோபம்? பரீட்சையிலே நான் தேற வேண்டியது முக்கியமில்லையா?" என்று தன் போக்கிலே பேசிக்கொண்டே போன சுகுமாரன் நீலா முன்றானையால் கண்ணைத் துடைத்துக்கொள்வதைக் கண்டதும் சட்டென்று தன் பேச்சை நிறுத்திக்கொண்டு அவளைச் சமீபித்தான். "என்ன நீலா இது? ஏன் அழுகிறாய்? சொல்லு நீலா?" என்று துடித்தான். நீலா நடுங்கும் குரலில், "சென்ற வெள்ளிக் கிழமையிலிருந்து என் மனசை உருப்புரியாத குழப்பமும் பயமும் சூழ்ந்து வாட்டி எடுக்கின்றன" என்று திணறிக் கொண்டே சொன்னாள். "ஏன்? எதற்காக? எதைப்பற்றி?" என்று அடுக்கினான் அவன்.

"நம் எதிர்காலத்தைப் பற்றித்தான்."

"அதைப்பற்றி என்ன?"

"நாம் நினைத்துக் கொண்டிருக்கிறபடி எல்லாம் நடக்குமா, நடந்தாலும் நம் வாழ்க்கை சோபிக்குமா என்றெல்லாம் குழம்பித் தவிக்கிறது என் மனசு."

"திடீரென்று அப்படி ஒரு குழப்பம் ஏற்படக் காரணம்?"

"அன்றைக்குக் காலையிலிருந்து உங்களை நமஸ்கரிக்க வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்தேன். சாயங்காலம் வரையில் நீங்கள் வரவே இல்லை. அப்போதே என் மனசு வேதனைப்பட்டது. வந்தும் நான் நமஸ்காரம் செய்ய முயன்ற போது அபசகுனம் போல யாரோ வந்து சேர்ந்தார்கள். நமஸ்காரம் தடைப்பட்டது. அது என் மனசில் சுருக்கென்றது. நீங்களும் கோயிலுக்கு வர வேண்டும் என்று எனக்கு ஆசை. அதற்கும் மாமா தடை விதித்தார். உடனே என் மனம்..."

"இதெல்லாம் சர்வ சகஜமான காரியங்கள்தாம்."

"அத்துடன் இருந்திருந்தால்கூடப் பரவாயில்லை.—"

"இன்னும் என்ன நடந்தது?"

"கவலை நிறைந்த உள்ளத்தோடு நான் அம்பாள் சந்நிதியிலே நின்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தபோது அங்கே ஒரு தீபம் பொக்கென்று அணைந்தது. திரி புகைந்தது. சுடரும்......"

"அணைந்து போன தீபந் தவிர இன்னும் அநேகந் தீபங்கள் அங்கே இருந்தன அல்லவா? அது போதும். வீணுக்கெல்லாம் மனசைப் போட்டு அலட்டிக் கொள்ளாதே."

"நீங்கள் முதல் முதலாக அளித்த பரிசு......"

"அதைப்பற்றி என்ன?"

"அப்பொழுதே அதை மாமா, மாமி இருவரிடமும் காட்டியிருக்க வேண்டும். அப்படிச் செய்யாததால் அதைப் பெட்டியிலேயே வைக்க வேண்டியதாயிற்று. அது பார்வைக்கு அழகான

பொன் மலர். அதனுள் இருக்கும் கற்கள் போலி வைரம் என்றீர்கள். நம் வாழ்வும் போலியாக, வெறும் மேல் பகட்டுடன் மணமில்லாத மலரைப்போல ஆகிவிடுமோ என்று......"

"கொஞ்சம் புத்திசாலித்தனமாக உள்ளவர்களுக்கே இப்படித்தான் தொட்டதற்கெல்லாம் குயுக்திகள் தோன்றும். இதெல்லாம் வீண் கற்பனை நீலா. நீயாகச் சேகரிக்கும் வேதனை நினைவுகள். மனதைத் தூய்மையாக வைத்துக்கொள். தைரியமாக இரு. நான் உன்னிடம் ஒரு முக்கியமான சமாசாரம் சொல்ல வந்தேன். நீ முன்கூட்டியே இப்படியெல்லாம் சொன்னதிலிருந்து நான் சொல்ல வந்ததைச் சொல்லவே எனக்கு...."

"வெறுமனே சொல்லுங்கள்."

"எங்கள் கல்லூரியிலிருந்து ஒரு கோஷ்டி சுற்றுப் பிரயாணத்தை முன்னிட்டு நாளைக் காலையில் புறப்படுகிறது.—"

"தெரியும். மாமா சொன்னார். அந்தக் கோஷ்டியிலே, நீங்களும் ஒருவர். திரும்பி வர ஒரு மாசம் ஆகும். அதுதானே ?"

"ஆம். நான் திரும்பி வருகிற வரைக்கும் நீயும் மாமியும் என்னைப் பற்றிக் கவலை இல்லாமல் இருக்க வேண்டும் என்று நான் சொல்ல வந்தால் அதற்குமுன் நீ......"

கோயிலிலிருந்து சீதாலட்சுமி வந்து கொண்டிருக்கிறாள் என்பதை அறிவிப்பதே போல அவள் வாசலில் அடுத்த வீட்டு அம்மாளுடன் பேசுங் குரல் கேட்டது. உடனே சுகுமாரன் நீலாவிடம் விடை பெற்றுக்கொண்டு ஹாலின் பக்கம் சென்றான்.

அன்றிரவு அவனுக்கும் தூக்கமே இல்லை. நீலாவைப் பிடித்த கவலை அவனையும் பிடித்துவிட்டது. அந்த நிலையிலேயே மறுநாள் அவன் மாணவர் கோஷ்டியோடு கிளம்பிச் சென்றான்.

அதற்கு மறுநாள் விடியற்காலம் ஐந்து மணிக்கு உமாபதியின் வீட்டு வாசலில் தந்திச் சேவகன் வந்து நின்று குரல் கொடுத்தான். உமாபதி சென்று தந்தியை வாங்கிப் படித்தார்:

"யோகத்திற்கு உடல் நிலை கவலைக்கு இடமாக இருக்கிறது. உடனே வரவும்—வேதராமன்."

இதைச் செவியேற்ற நீலா, சீதாலட்சுமி இருவரும் ஏக காலத்தில், "ஆ!" என்றார்கள். நீலாவுக்கு இருதயத்தில் பெரும் பாறை மோதினாற்போல் இருந்தது. "ஐயோ, போன வாரங்கூட எல்லாரும் சௌக்கியம் என்று கடிதம் வந்ததே! திடீரென்று என்ன நேர்ந்திருக்கும்?" என்று புலம்பி அழுதாள் சீதாலட்சுமி. உமாபதி அவர்களைப்போல் வாய் விட்டு ஏதும் அரற்றவில்லை. உடனே நீலா, சீதாலட்சுமி இருவருடனும் ரோகிணீபுரத்திற்குப் பிரயாணமானார்.

# 10. இடிமேல் இடி!

வண்டியை விட்டிறங்கி "அம்மா!" என்று கூவியபடி தரையிலே கால் பாவாமல் வீட்டிற்குள் பாய்ந்தோடி வந்த நீலாவைக் கண்டதும் எல்லோரும் விலகி வழி விட்டனர். அவள் பின்னே உமாபதியும் சீதாலட்சுமியும் வந்ததைக் கண்டதும் வேதராமன் துயரத்தை அடக்க மாட்டாமல், "உமாபதி!..." என்று வீரிட்டார். யோகாம்பாள் கட்டை போலக் கிடந்தாள். பிரக்ஞை இல்லை. மூச்சு லேசாக இழைந்து கொண்டிருந்தது. தாயைச் சமீபித்த நீலா அவள் முகத்தைத் தன் புறமாகத் திருப்பி, "அம்மா! அம்மா!" என்று கூப்பாடு போட்டு அழுதாள். முகத்தோடு முகம் பதித்துக் கதறினாள். உமாபதியும் சீதாலட்சுமியும் அலறித் துடித்தார்கள். டாக்டர் கைவிட்டு விட்டார்; அதி சீக்கிரத்தில் பிராணன் போய்விடப் போகிறது என்பதை அறிந்தபோது உமாபதி, சீதாலட்சுமி, நீலா ஆகியோரின் உள்ளம் பட்ட பாட்டை விவரிக்கச் சொற்களே இல்லை.

இரண்டு நாள் முன் யோகாம்பாள் ஆற்றங்கரைக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டு வருகையில் பிசு பிசு வென்று தூறிக்கொண்டிருந்த மழை திடீரென்று வலுக்கவே வழியில் ஒண்ட இடமின்றிக் கொட்டுகிற மழையிலே சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே வீடு வந்து சேர்ந்தாள். சாயங்காலமே உடம்பு ஒரு மாதிரியாக இருந்தது. இரவு ஜுரம் வந்தது. காலையில் அதிகம் ஆயிற்று. மாலையில் மிகக் கடுமையாகி விட்டது. இரவு ஜன்னி கண்டது. விடியற்காலம் தாது விழுந்துவிட்டது. டாக்டரின் மருந்துகள் பயன் படவில்லை— இந்த விவரத்தை அறிந்த உமாபதி, 'சரிதான், ஏதோ ஒரு வியாஜம்' என்று மனசில் எண்ணிக் கொண்டார்.

இருந்தாற் போலிருந்து யோகாம்பாளின் உடலிலே சிறிது சலனம் ஏற்பட்டது. எல்லோரும் பரபரப்புடன் அவளைக் கவனித்தனர். அவள் கண்கள் சற்றே மலர்ந்தன. "அம்மா!" என்று தன் முகத்தை அவள் முகத்தருகே கொண்டு போனாள் நீலா. யோகாம்பாளின் நிலையற்ற பார்வை நீலாவின் முகத்திலே ஒரு கணம் நிலைத்தது. அந்த அளவில் தலை ஒரு புறமாகச் சாய்ந்தது; ஆவி பிரிந்து விட்டது.

அடுத்த கணத்தில் அங்கே ஓவென்ற அழுகைக் குரல் எழுந்தது. வீடே கிர்த்துளிப்பட்டது. மேற்கொண்டு ஆக வேண்டிய காரியங்கள் நடைபெற்றன. சற்றைக்கெல்லாம் யோகாம்பாளின் உடல் தீக்கு இரையாகத் தொடங்கிற்று.

கிரியைகள் யாவும் பூர்த்தியடைந்தன. உமாபதி மென்று விழுங்கிக் கொண்டே தமது சென்னைப் பிரயாணத்தைப்பற்றி வேதராமனிடம் பிரஸ்தாபித்தார். அப்போது அவர் உமாபதியைத் தனிமையிலே அழைத்து சில சமாசாரங்கள் சொன்னார்.

" உமாபதி, நான் எளிய குடும்பத்திலே பிறந்தேன். உன் தமக்கையை மனைவியாக அடைந்தேன். அவளோடு கூடவே லக்ஷ்மிதேவியும் என் வீட்டிலே குடிபுகுந்தாள். யோகம் இருந்த வரைக்கும் வீட்டிலே பொங்கித்தான் பொழிந்தது. மணி மணியாக இரண்டு குழந்தைகளைப் பெற்றாள். அவை மனுவாகி ஒரு நல்ல காரியத்தைச்செய்து கண்ணால் பார்க்காமல் அவள் திடீரென்று போய் விட்டாள். அவள் போன துயரம் ஒருபுறம் இருக்க அவளோடு வந்த லக்ஷ்மிதேவியும் அவளைப் பின் தொடர்ந்தே போய் விடுவாள் என்று தோன்றுகிறது. சில தினங்களுக்கு முன்பு என் வியாபாரம் திடீரென்று தலைகுப்புற விழுந்துவிட்டது. யோகம் இறந்த மூன்றும் நாள் அதுபற்றிக் கிடைத்த தகவலை நான் இதுவரை வெளிப்படுத்தாமலே இருந்தேன். அதோடுமட்டும் இல்லை; பெரிய வழக்கு ஒன்றும் தலை எடுக்கும் போல் இருக்கிறது. இதனால் நான் மிகவும் க்ஷீண தசையை அடைந்துவிடுவேன் என்று தோன்றுகிறது......"

"பூ! இவ்வளவுதானே அத்திம்பேரே? இது கிடக்கிறது, வேலையைப் பாருங்கள். யோகமே போய்விட்டாள். அப்புறம் எது போனால்தான் என்ன?" என்றார் உமாபதி.

"அது சரி. செல்லமாக வளர்த்த குழந்தைகளின் கதி..."

"என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? என்னுடைய சொத்தையெல்லாம் அவர்களைத் தவிர வேறு யார் அடையப் போகிறார்கள் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? வீணுக்கெல்லாம் மனசைப் போட்டு அலட்டிக் கொள்ளாதீர்கள்."

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கையில் தபாற்காரன் உமாபதிக்கு ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்தான். அது குமாரபுரத்திலிருந்து அவர் காரியஸ்தர் எழுதியது. ரிஜிஸ்தர் தபாலாகிய அது சில நாட்கள் சென்னையிலே தாமதித்து விட்டு இப்போது இங்கே வந்திருந்தது.

கடிதத்தைப் பிரித்துப் படித்த உமாபதி, "உம். எதிலே போனாலும் உபத்திரவத்தைத் தவிர வேறு இல்லை" என்று சொல்லிக்கொண்டே அதை வேதராமனிடம் கொடுத்தார். சில மாதங்களுக்குமுன் உமாபதி புதிதாக வாங்கிய நிலத்திலே ஏதோ தகராறு தோன்றி வளருவதாகவும் உமாபதி உடனே கிளம்பிவந்து ஆக வேண்டியவற்றைக் கவனித்துச் செல்ல வேண்டும் என்றும் அதில் எழுதி இருந்தது.

உமாபதி அன்றே கிராமத்திற்குக் கிளம்பிவிட்டார். சீதா லட்சுமியும் அவரும் விடைபெறும்போது நீலா கண் கலங்கி னின்ற காட்சி கண்ணராவியாக இருந்தது. "கூடிய சீக்கிரம் எல்லாரும் சேர்ந்து இருக்கலாம். வருத்தப்படாதே அம்மா. அப்பாவையும் தம்பியையும் இப்போது நீதான் பார்த்துக் கொள்ளவேண்டும்" என்றுகூறிக்கிளம்பிச் சென்றார்கள் அவர்கள்.

நீலா தகப்பனாரையும் தம்பியையும் கவனித்துக் கொள்ளத் தான் செய்தாள். தாய் இறந்துவிட்டாள் என்றதுமே சில பிராயங்களை அதிகமாகக் கடந்து விட்டவள் போன்ற நிலையை அடைந்துவிட்டாள் அவள். மிகுந்த அநுபவம் உடையவள் போலக் குடும்ப விவகாரங்களைக் கவனித்தாள். சிரிப்பு, விளையாட்டு, பண்டு, பரிகாசம் முதலியன இருந்த இடம் தெரியாமல் மறைந்தோடிப் போயின. அமரிக்கையும் விவேக மும் பொறுமையும் அவளைத் தேடி வந்து அடைந்தன.

வேதராமன் உமாபதியிடம் சொன்ன கட்டம் வெகு விரைவிலேயே ஏற்பட்டு விட்டது. நிலைமையைச் சமாளிக்க அவர் வெகு பாடுபட்டார். ஒன்றும் பயனில்லை. புது வெள்ளம் வந்து பழைய வெள்ளத்தையுங் கொண்டு போன கதையாக வியாபாரம் தொடங்கு முன் இருந்த பிதுரார்ஜித சொத்துக்கள்- வீடு முதல் ஜங்கமசொத்துக்கள் வரை-அனைத்தையும் இழுத்துக் கொண்டு போய்விட்டது அந்தச் சூறுவளி.

முன்னம் அவர் குறிப்பிட்ட வழக்கு விஷயமாகச் சில தினங்களில் அவர் சென்னை சென்று வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. குழந்தைகளைப் பக்கத்து வீட்டு அம்மாளிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றார். வழக்கு முடிந்தது. சாயங்காலம் உமாபதியின் வீட்டை அடைந்தார். வீடு திறந்துதான் இருந்தது. ஆனால் அங்கே உமாபதி, சீதாலட்சுமி இருவரும் இல்லை. வேறு யார் யாரோ இருந்தார்கள். விசாரித்ததற்கு அவர்கள் கொடுத்த பதில் நம்பத் தகாததாக இருந்தது.

உமாபதியும் சீதாலட்சுமியும் காலமாகிவிட்டார்கள்!

'கதையா, கனவா, வேறு ஏதாவது......'

வேதராமனுக்கு மூளை கலங்கிவிடும் போல் இருந்தது. அந்த மனிதர் மேலும் நிதானமாகச் சொன்னார்.

"நானே முதலில் இந்தச் செய்தியை நம்பவில்லை. நான் என்ன; யாருமேதான் நம்பவில்லை. குமாரபுரத்திலிருந்து வந்த ஆசாமிகள் சொன்ன தகவலும் அவர்கள் கொண்டு வந்திருந்த கோர்ட்டு தஸ்தவேஜும் பத்திரிகைச் செய்தியுமே எங்களுக்கு நம்பிக்கையை உண்டு பண்ணின. குமாரபுரத்திலிருந்து உமாபதிக்கு ஒரு ரிஜிஸ்தர் தபால் வந்தது. அவர் வருகையை

எதிர்பார்த்துச் சிலநாட்கள் வரை அதை இங்கே நிறுத்தி வைத்துப் பிறகு ரோகிணீபுரத்திற்கு அனுப்பினேம். அதைப் பார்த்து விட்டு அவர் அங்கிருந்து குமாரபுரம் சென்ருர். காரியஸ்தர் கடிதம் எழுதியபோது ஊரில் விசேஷம் எதுவும் இல்லை. பிறகு காலரா ஏற்பட்டிருந்தது. பத்திரிகைகளில் தினந் தோறும் வந்த செய்தி மிகவும் பயங்கரமாக இருந்தது. அந்தப் பக்கங்களிலே அப்போது அந்த நோயினல் ஏராளமான உயிர்ச் சேதம். உமாபதி ஊரை அடைந்த பிறகுதான் விவரம் அறிந்தார். 'ஏன் வந்தீர்கள்? உடனே கிளம்புங்கள்' என்று முடுக்கினர்கள் சிலர். அவரும் கிளம்பினர். ஆனல் அதற்குள்ளாகவே அந்தக் கொடிய நோய்க்கு ஆளாகிவிட்டாள் அவர் மனைவி. ஸ்டேஷனுக்குப் போய்ச் சேருவதற்குள் நிலைமை கடுமையாகி விட்டது. செய்வகை புரியாமல் உமாபதி தவித்துக் கொண்டிருக்கையிலேயே சீதா லட்சுமியின் காலம் முடிந்துவிட்டது. ஊரார் உதவியுடன் அவளை எடுத்து அடக்கம் செய்த உமாபதி தாமாவது மீளலாம் என்று துரிதமாகக் கிளம்பினர். ஆனல் அந்தக் கொள்ளை நோய் அவரையும் விடவில்லை. கணத்திலே பற்றிப் பலிவாங்கிவிட்டது. அங்கே சாமா என்று ஒரு துஷ்டன். அவன்தான் உமாபதிக்கு நெருங்கிய தாயாதி. சந்தானம் இல்லாத அவருக்கு அவன் தான் வாரீசு முறையாகையால் அவர் உடலை அவனே எடுத்து அடக்கம் செய்தான். வெகு நாட்களாகவே உமாபதியின் சொத்துக்களில் கண் வைத்திருந்த அவன் உடனேயே கோர்ட்டாரிடம் விண்ணப்பித்துக் கொண்டான், உமாபதியின் சொத்துப் பூராவும் தனக்குக் கிடைக்க வேண்டும் என்று. அதற்கான தஸ்தவேஜுகளையும் போதிய சாட்சிகளையும் கோர்ட்டில் ஆஜர் படுத்தினன். சட்டம் தன் காரியத்தைச் செய்துவிட்டது. சாமா ஊரில் உள்ள நிலபுலன்களையும் வீடு வாசல்களையும் வசப்படுத்திக்கொண்டு இங்கே வந்தான். நான்தான் இந்த வீட்டிற்கு உரியவன். சாமாவின் வசம் இருந்த கோர்ட்டாரின் தீர்ப்பைப் பார்த்தேன். உமாபதியின் சாமான்கள் பூராவையும் ஒப்படைத்து ரசீது பெற்றுக்கொண்டேன்."—

வேதராமன் கல்லாய்ச் சமைந்து போய்விட்டார். அவர் உள்ளம் அந்தச் செய்தியை நம்ப மறுத்தது. காலராவுக்கு அப்படிக் கொள்ளை கொள்ளும் சக்தி உண்டு; அது ஒரு நாளில் ஒரு குடும்பத்தில் புகுந்து பலபேரை ஹதம் செய்து பூண்டையே அடியோடு வேரறுத்துவிடும் என்பனவெல்லாம் அவருக்குத் தெரியும். ஆனலும் நேரிலே குமாரபுரம் சென்று விசாரித்து அறிய வேண்டும் என்று நினைத்தார். உடனேயே கிளம்பினர்.

அவர் குமாரபுரம் எல்லையைச் சமீபித்தபோது உமாபதியின் பக்கத்து வீட்டுக்காரரைத் தற்செயலாகச் சந்திக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. அவரிடம் உமாபதியைப்பற்றி விசாரித்தார். பட்டணத்திலே அந்த வீட்டுக்காரர் சொன்னதையே தான் அவரும் சொன்னார். உமாபதி, சீதாலட்சுமி இவர்களின் கோர முடிவினால் ஏற்பட்ட அளவற்ற துக்கத்தைவிட அடிநாளிலிருந்தே உமாபதியின் சொத்துக்களுக்கு நாக்கை நீட்டிக் கொண்டிருந்த சாமா உமாபதியின் முடிவைப்பற்றித் தமக்கு அறிவிக்காமல் அவர் காலமான உடனேயே பரபரப்புடன் சொத்துக்களை அடைவதற்கான முயற்சிகளில் ஈடுபட்ட விஷயந்தான் அவருக்கு அதிக ஆத்திரத்தை உண்டுபண்ணிற்று. உமாபதியின் சுயார்ஜிதமான அந்தச் சொத்துக்கள் கிரமமாகத் தம் மக்களைச் சேர வேண்டியதிருக்க அந்தத் தாயாதிக்காரன் அநியாயமாகக் கொண்டு போனானே என்று ஆதங்கப்பட்டார். நொந்த உள்ளத்துடன் ஊர் திரும்பினார்.

தகப்பனாரைப் பார்த்த நீலா ஆவலோடு, “மாமா என்ன அப்பா சொன்னார்?” என்று கேட்டாள். அவள் கேள்வி அவர் அடிவயிற்றைக் கிளறியது. சந்தர்ப்பத்தை உத்தேசித்து அவர் நெஞ்சார, வாயாரப் பெரிய பொய்யைச் சொன்னார்.

“இங்கே ஆகவேண்டிய பங்கீடுகளைச் செய்துகொண்டு எல்லாரையும் அழைத்துக்கொண்டு வரச்சொன்னான் அம்மா.”

‘அப்பாடா!......’ என்றது அவள் உள்ளம். நீண்ட பெருமூச்சுக்குப் பின், “இங்கேதான் எல்லாம் தன்னாலேயே பங்கீடு ஆகிவிட்டனவே! புறப்பட்டுப்போக வேண்டியதுதான் பாக்கி” என்றாள். வேதராமனின் வயிறு குமைந்தது.

அன்று இரவெல்லாம் வேதராமனுக்குத் தூக்கம் இல்லை. நீலாவும் கண் உறங்கவில்லை. அவர், ‘மேலே என்ன செய்வது?’ என்று சிந்தித்தார். அவள், ‘அப்பா ஏன் பட்டணத்திற்குப் புறப்படும் விஷயத்திலே அசட்டையாக இருக்கிறார்?’ என்று யோசித்தாள். பட்டணம் போனால் மாமாவும் மாமியும் சுகுமாரனும் போட்டி போட்டுக் கொண்டு ஆறுதல் அளிப்பார்கள் என்ற நினைவு அவள் உள்ளத்திலே நிறைந்திருந்தது. அந்த நினைவைத் தொடர்ந்து சுகுமாரனிடம் ஓடிற்று அவள் மனம்.

விடியற்காலம் நாலு மணி சுமாருக்கு எழுந்த வேதராமன் அயர்ந்த தூக்கத்தில் இருந்த நீலாவை எழுப்பி, “நான் கொஞ்சம் வெளியே சென்று வருகிறேன் அம்மா. ஜாக்கிரதையாக இரு” என்று சொல்லி விட்டுக் கிளம்பினார். நீலா, அவர் எங்கே

போகப் போகிறார், என்ன செய்யப் போகிறார் என்ற விவரம் எதுவும் புரியாத நிலையில் நல்லபடியாக அவர் திரும்பி வந்து சேர வேண்டுமே என்று கவலைப்பட்டாள்.

மூன்றும்நாள் காலையில் வேதராமன் திரும்பி வந்தார். வந்த உடனேயே, வறண்ட குரலில் பெண்ணைப் பார்த்து, "கிளம்பு அம்மா" என்றார். அத்தனை துக்க நிலையிலும் அவள் மனத்திலே சற்றே சந்தோஷம் தலைக்காட்டிற்று. 'பட்டணத்திற்குக் கிளம்பு கிறோம்' என்கிற நினைவே அதற்குக் காரணம். ஆதரித்த மனிதர்களிடம் விடை பெற்றுக்கொண்டு அவர்கள் கிளம்பினார்கள்.

ரெயில் சிறிது தூரம் சென்றதுமே மார்க்கத்தைக் கவனித்த நீலா திடுக்கிட்டு, "ஏன் அப்பா? நாம் இப்போது பட்டணத்திற் குத்தானே போகிறோம்?" என்றாள். வேதராமன் மிகவும் நிதான மாக, "ஆமாம். ஆனால் நேரிட இல்லை. வேறு ஒரு இடத்திற்குச் சென்று விட்டு" என்றார். நீலா இந்தப் பதிலைக் கேட்டு மிக்க ஆயாசங் கொண்டாள்.

திருச்சி ஜில்லாவைச் சேர்ந்த நல்லமங்கலம் என்னும் ஊரிலே ராஜாங்கம் என்று ஒரு தனிகர். அவர் வேத ராமனின் பால்ய நண்பர். இளகிய உள்ளம் படைத்தவர். ரோகிணீபுரத்திலே அன்று இரவெல்லாம் புரட்டிப் புரட்டி யோசனை செய்த வேதராமனுக்குத் திடீரென்று ராஜாங்கத் தின் நினைவு வந்தது. அவர் உதவுவார் என்ற நம்பிக்கையும் எழுந்தது. உடனே நல்லமங்கலம் சென்றார். ராஜாங்கத்தினிடம் தம் நிலைமையை எடுத்துக் கூறினார். ராஜாங்கம் மறுபேச்சின்றி அவரைத் தம் பண்ணையின் தலைமைக் காரியஸ்தராக ஏற்றுக் கொண்டார். வேதராமன் உடனே புறப்பட்டு ரோகிணீபுரம் சென்று பெண்ணையும் பிள்ளையையும் அழைத்துக்கொண்டு நல்ல மங்கலத்திற்குப் பிரயாணமானார். இப்போது அவர்கள் அங்கே தான் போய்க் கொண்டிருந்தார்கள்.

நல்லமங்கலத்தை அடைந்த வேதராமன் தமக்கென்று ராஜாங்கம் அளித்த சிறுவீட்டிலே புதுக் குடித்தனத்தைத் துவங்கின போதுதான் நீலா திகைத்துத் தடுமாறினாள். தகப்பனாரை நோக்கிக் கேள்விமேல் கேள்விகளாக அடுக்கினாள். அதற்கு மேலும் விஷயத்தை மூடி வைக்க முடியாது, மூடி வைப்பது உசிதமும் அல்ல என்று எண்ணிய வேதராமன் உமாபதி, சீதாலட்சுமி இவர்களைப் பற்றிக் கூறினார். அதைக் கேட்டதும், "ஐயோ!" என்று அலறி விழுந்த நீலா வெகு நேரமாகியும் மூர்ச்சை தெளிந்து எழுந்திருக்கவே இல்லை.

# 11. உடைந்த உள்ளம்

சுகுமாரன் ஒரு மாசத்திற்குப் பின் மாணவர் கோஷ்டியுடன் சென்னை திரும்பினன். வருகிறபோதே ஜுரம். அந்த நிலையிலேயே அளவற்ற ஆவலோடு உமாபதியின் வீட்டிற்குச் சென்றான். அங்கே அவன் கேள்விப்பட்ட செய்தி மெலிந்து போயிருந்த அவன் உள்ளத்தைத் தகர்த்தெறிந்து விட்டது. முன்னமேயே அவனுக்குக் கிராமத்திலிருந்து ஒருகடிதம் வந்திருந்தது. நீண்ட நாட்களாக நோய்வாய்ப்பட்டு உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த அவன் தமையன் மனைவி காலமாகி விட்ட செய்தி அதில் இருந்தது. அதுவேறு அவன் உள்ளத்திலே அளவற்ற வேதனையை உண்டு பண்ணிற்று. எல்லாமாகச் சேர்ந்து அவன் உடல் நிலையைக் கவலைக்கிடமான நிலைக்குக் கொண்டு வந்துவிட்டன. நண்பர்கள் அவன் தமையன் நாராயண சர்மாவுக்குத் தந்தி கொடுத்து விட்டார்கள்.

நாராயண சர்மா வந்தார். தம்பியின் உடம்பு போயிருந்த போக்கைக் கண்டு கண்ணீர் உகுத்தார். ஏராளமாகப் பணத்தைச் செலவிட்டுக் கவனித்தார். சுகுமாரன் பிழைத்தெழுந்தான். அவனிடமிருந்து உமாபதி, சீதாலட்சுமி இவர்களின் முடிவைப் பற்றி அறிந்த சர்மா துடித்துப் போனார். சுகுமாரன் குமுறிக் குமுறி அழுதான். சர்மா தேறுதல் சொன்னார்.

சில தினங்களுக்குப் பின் நாராயண சர்மா தம்பியைக் கிராமத்திற்கு அழைத்துச் சென்றார். தாய் மகனின் உடல் நிலை கண்டு உருகிப் போனாள். சகஜமாக எழுந்து நடமாடக்கூடிய நிலை ஏற்பட்ட பின்பும் சுகுமாரன் உள்ளம் படுக்கையையேதான் நாடிற்று. சதா நீலாவைப்பற்றிய சிந்தனை தவிர வேறு இல்லை.

'பெற்ற தாயையும் தகப்பனையும்விட அதிக அன்புடன் நேசித்து வந்த உமாபதியும் சீதாலட்சுமியும் போய்விட்டார்கள். இனி அவர்களை நினைந்து அழுது புலம்புவதால் பயன் இல்லை. ஆனால் நீலா?......அவர்களின் பிரிவு அவளையும் பிரித்து வைத்து விட்டதே!... அவளை இப்போது எங்கே என்று தேடுவது? பாழும் சுற்றுப் பிரயாணத்திற்குப் போகாமல் இருந்திருந்தால்?......அது தான் இல்லை; மாசக் கணக்காகப் பழகிய பெண்ணிடம் அவள் ஊர், பெற்றோர் பெயர் முதலியவற்றையாவது கேட்டு அறிந்து கொள்ளாதது எத்தனை மதியீனம்!' என்றெல்லாம் மனசோடு புலம்பிக்கொண்டே கிடந்தான் அவன். திடீரென்று ரோகிணீபுரம் என்ற ஊரின் பெயர் அவன் நினைவிலே எழுந்தது. எப்போதோ உமாபதியும் சீதாலட்சுமியும் பேசிக்

கொண்டிருந்தபோது அடிபட்ட பெயர் அது. அந்த ஊர் எங்கே இருக்கிறது என்று விசாரித்துக்கொண்டு ரோஹிணீ புரம் போய்ச் சேர்ந்தான் அவன். உமாபதியின் தமக்கை வீடு எது என்று விசாரித்தான். முயற்சி வீணாகவில்லை. விவரம் கிடைத்தது. கிடைத்து என்ன பயன்? வேதராமனின் துர்ப்பாக்கிய நிலை துக்கத்தைத் தந்தது; அதைவிட அதிகத் துக்கத்தைக் கொடுத்தது, அவர் குடும்பத்தோடு எந்த ஊருக்குப் போயிருக்கிறார் என்ற தகவல் கிடைக்காதது. அவரை எங்கே என்று தேடுவது?

இப்படி எண்ணிச் சும்மா இருந்துவிடவில்லை அவன். ஊருக்குச் சென்று செலவுக்குத் தேவையான பணத்தை எடுத்துக்கொண்டு தாய், தமையன் இருவருக்கும், ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி விட்டுக் கிளம்பினான். யாத்திரிகன் போல ஊர் ஊராகச் சென்றான். அவன் போகாத ஊர்கள் வெகு சில. அவற்றுள் நல்ல மங்கலமும் ஒன்று.

இனி எங்கும் செல்வதற்கில்லை என்ற நிலையில் உடைந்த உள்ளத்துடன் தன் ஊர் திரும்பினான் அவன். அதுவரை நம்பிக்கை என்னும் தெம்பு அவன் உள்ளத்தையும் உடலையும் சோரவிடாமல் பாதுகாத்து வந்தது. இனி அதற்கும் இடம் இல்லை என்றதும் அவன் அப்படியே வாடி வதங்கிப் போனான். அவன் நிலை சிவகாமி அம்மாள், நாராயண சர்மா இருவர் உள்ளத்திலும் அளவற்ற கவலையை உண்டுபண்ணிற்று.

சிற்றுண்டி, காபி, சாப்பாடு, தூக்கம், நடமாட்டம், நாலு பேரின் கூட்டுறவு எதிலுமே விருப்பமற்றுப் போய்விட்டது அவனுக்கு. மனத்திலே கசப்பு ஏறி உள்ளமெல்லாம் வியாபித்து ரத்தத்திலே கலந்து நாடி நரம்புகளிலெல்லாம் பரவி விட்ட நிலையில் நடைப்பிணமாக இருந்து வந்த அவன் உள்ளம் ஓயாத சிந்தனையால் குழம்பிப் போய்க் கிட்டத்தட்டப் பைத்தியம் பிடிக்கக்கூடிய நிலையை எட்டிவிட்டது. அந்த நிலையைக் கண்டு அவனே பயந்துபோனான். 'உயிர் போய்விட்டால் பரவாயில்லை. இரண்டுங்கெட்டானாக உயிரோடு இருந்து கொண்டு பைத்தியமாக நடமாடுவது மிகக் கேவலம், மிகப் பயங்கரம். அதற்கு இடங் கொடுக்கக்கூடாது. அந்த நிலைக்கு ஏதாவது மாற்றந் தேடவேண்டும்,' என்று எண்ணினான். ஒரு நாள் ஒரு தினசரியில் ஒரு விளம்பரத்தைக் கண்டான். பம்பாயில் ஒரு பெரிய கம்பெனியில் உதவி மானேஜர் வேலை காலி இருப்பதாக அந்த விளம்பரம் கூறிற்று. உடனே ஒரு விண்ணப்பத்தை எழுதிப் போட்டான். நல்ல பதிலாகவே வந்துவிட்டது. உடனேயே பம்பாய்க்குக் கிளம்பிச் சென்றான்.

# 12. கல்யாண ஏற்பாடு

தகப்பனார் சொன்ன செய்தியைக் கேட்டு 'ஐயோ' என்று அலறித் துடித்து மூர்ச்சித்து விழுந்த நீலா நீண்ட நேரத்திற்குப் பிறகுதான் தெளிந்து எழுந்தாள். மனசை அடக்கமாட்டாமல் ஓவென்று வாய்விட்டு அலறினாள். என்ன என்னவோ சொல்லி அரற்றினாள். முட்டிக் கொண்டாள். மோதிக் கொண்டாள். புரண்டு அழுது புழுவாய்த் துடித்தாள். அவள் நிலை கண்டு கேசவன் அப்படியே விக்கிப் போனான். குழந்தைகளைச் சமாதானப் படுத்த வேதராமன் வெகு பாடுபட்டார். ஆனாலும் நீலாவின், உள்ளத்திலே சுட்ட புண் ஆறவே இல்லை.

ஆனால் வேதராமன் விவகாரம் அப்படி இல்லை. அவர் மனத்திலும் அடங்காத் துயரம் குடி கொண்டுதான் இருந்ததென்றாலும் கடமையைக் கருதி அனைத்தையும் மறந்தவர் போல வளைய வந்து கொண்டிருந்தார். அவருடைய விவசாய ஞானத்தாலும் சலியா உழைப்பாலும் பெரிதும் லாபத்தை அடைந்த ராஜாங்கம் மிகவும் பெருந்தன்மையோடு நடந்துகொண்டார். பேசிய ஊதியத்திற்கு மேலேயே தாராளமாகக் கொடுத்து வந்தார். அதோடு மட்டுமின்றிக் கேசவனைத் திருச்சிக்கு அனுப்பி ஹாஸ்டலில் இருந்து கொண்டு படிக்கவும் ஏற்பாடு செய்தார். வேதராமனின் உள்ளம் சற்றே நிம்மதிப்பட்டது.

ஒருநாள் பேச்சு வாக்கிலே ராஜாங்கம் சொன்னார்: "பையனுக்குத்தான் ஒரு மாதிரியாக ஏற்பாடு செய்து விட்டோம். பெண்ணுக்கும் எங்கேயாவது பார்த்து ஒருவரைப் பேசி முடியுங்கள். சீக்கிரமாகக் கல்யாணத்தை நடத்திவிடலாம். ஏன் என்றால் இந்த ஊர் அவ்வளவாக நல்ல ஊர் இல்லை. வயசுவந்த பெண்ணைக் காலா காலத்திலே ஒருவர் கையிலே ஒப்படைத்து விடுவது நல்லது" — இதைக்கேட்டதும் வேதராமன் ஸ்தம்பித்துப் போய்விட்டார். மனசுக்குள் நீலாவின் வயசைக் கணக்கிட்டுப் பார்த்தார். 'அட! பதினைந்து நிரம்பி விட்டதே!...' என்று மனசோடு சொல்லிக்கொண்டார். அன்று முதலே நீலாவுக்கு வரன்தேட ஆரம்பித்தார்.

வீட்டிலே ஜாதகங்களின் நடமாட்டமும் சோதிடர்களின் வரத்துப் போக்கும் கல்யாணப் பேச்சும் தொடக்கமானதும் நீலாவின் உள்ளத்திலே புதைந்து கிடந்த உணர்ச்சிகள் தலை நீட்டின. 'சுகுமார்—என் காதலன்', 'நான் சுகுமாரனின் மனைவி' என்பன போன்ற சொற்கள் இருதயத்தின் ஆழத்திலிருந்து மேலே எழுந்து எழுந்து அடங்கின. தகப்பனாரிடம், 'நீங்கள் படு

வது வீண் சிரமம்' என்று சொல்லத் தோன்றும்; சொல்ல வாய் வராது. மனசில் உள்ளதைச் சொன்னால், 'அந்தச் சுகுமாரன் இப்போது எங்கே இருக்கிறான்? சொல். நான் போய் அவனைப் பார்த்துப் பேசி வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன்' என்பார் தகப்பனார். அப்போது அவள் என்ன பதிற்சொல்ல முடியும்? 'ஊருந் தெரியாது, உறவினர் பேருந் தெரியாது; மாமா வீட்டிலே போய்ச் சீராடினபோது ஏற்பட்ட உறவு. தன்னாலே ஒருநாள் அவர் என்னைத் தேடிக்கொண்டு வருவார். அதுவரையில் காத்திருப்போம்' என்று சொல்ல முடியுமா? அப்படிச் சொன்னால் தகப்பனார் என்ன நினைப்பார்? என்ன சொல்வார்? 'அசட்டுப் பெண்' என்று நகையாடலாம்; 'மாமா வீட்டிலே ஏற்பட்ட உறவு எத்தகையதோ' என்று சந்தேகிக்கலாம். நல்ல பலன் ஏற்படுகிறதோ இல்லையோ, கெட்ட பலன் சம்பவிப்பது நிச்சயம். எனவே அவள் தகப்பனாரிடம் சுகுமாரனைப்பற்றி ஏதும் கூறாமல், "இப்போது நாம் இருக்கிற சிரமமான நிலைமையிலே இந்தக் கல்யாணத்திற்கு என்ன அப்பா அவசரம்?" என்று மட்டும் அவ்வப்போது சொல்லி வந்தாள். "தெய்வமே! என் சுகுமாரன் விரைவாக வந்து என்னை ஆட் கொள்ளவேண்டும்" என்று சதாகாலமும் வேண்டிக் கொண்டதோடு நில்லாமல், "அப்பாவின் முயற்சிகளெல்லாம் வீணாக வேண்டும்" என்றுங்கூட வேண்டலானாள். அவள் பிரார்த்தனைக்கும் வேதராமன் முயற்சிக்கும் இடையே கொடிய போராட்டம் நடந்து கொண்டே இருந்தது. அவள் உள்ளம் சுகுமாரனை எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டே இருந்தது.

நாட்கள் செல்லச் செல்ல அவள் மனசிலே இருந்த பலமான நம்பிக்கை கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து தளர்ச்சி ஏற்பட்டுக் கொண்டே வந்தது. 'இனிமேலாவது, சுகுமாரனைக் காணவாவது?' என்று அடிக்கடி எண்ணிப் பெருமூச்செறிவாள். ஏக்கம் அதிகரித்த போதெல்லாம் பெட்டியிலிருந்து அவன் தந்த பொன்மலரை எடுத்துப் பார்ப்பாள். கண்ணிலே ஒற்றிக் கொள்வாள். மார்போடு அணைத்துக் கொள்வாள். அவள் நிலைகண்டு அம் மலர் இதழ்களை மலர்த்திச் சிரிக்கும். அந்த நகைப்பிலே தோன்றும் பல் வரிசை போலப் பளிச்சிட்டு மின்னும் உள்ளே இருக்கும் வைரக் கற்கள். சுகுமாரன் என்ற எழுத்துக்களின் நடுவே அவனுடைய அழகிய முகம் தோன்றும். ஆனால் அந்த முகம் அந்த மலரைப் போன்று அவளைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரிக்காது. அவள் நிலையை உணர்ந்து அங்கலாய்ப்பது போல மௌனக் கண்ணீர் வடிக்கும். அதைக் கண்டு அவள் கண்களிலே நீர்மல்கிச் சுழலும். அவனு

டைய உதடுகள் அசைவதுபோல் தோன்றும். அவள் இதழ்கள் அசையும். 'நீலா!... நீலா!'' என்று அவன் கூப்பிடுவதுபோல ஒரு பிரமை தட்டும். உடனே அவள் உள்ளத்திலே, 'சுகுமாரா, என் தாபம்' என்ற பாட்டின் ஒலி பிறக்கும். அன்று இதே பாட்டை உள்ளம் நிறைந்த உற்சாகத்தோடு தன்னை மறந்து பாடினவள், இன்று உள்ளம் தாங்காத துயரத்தோடு விம்மிக்கொண்டே முணு முணுப்பாள். கண்களில் நிறைந்து தத்தளித்துக் கொண்டிருந்த நீரில் இரண்டு துளிகள் அந்த மலர் நடுவே பொட்டென்று விழும். உடனே இருதயத்திலே தாளமுடியாத ஒரு வலி ஏற்படும். நகைப் பெட்டியைக் கைப்பெட்டியிலே வைத்துப் பூட்டிவிட்டுக் குப்புறப் படுத்துக் குமுறி அழுவாள்.

வேதராமன் தம் பெண்ணுக்கு வரன் தேடித் தேடி அலுத்து விட்டார். சொத்தோ, படிப்போ, வேலையோ எதுவுமே இல்லாத வெற்று ஆசாமியிடம் நெருங்கினாலும் அவன் ஆயிரம் கொடு; ஐந்நூறு கொடு என்றான். ராஜாங்கம் வாக்களித்திருப்பதோ நூறு வராகன். கண்டிப்பான சுபாவமுடைய அவரிடமிருந்து அதற்கு மேல் காலணாக்கூட எதிர்பார்க்க முடியாது. அந்தத் தொகைக்கு மூன்றாந்தாரம் நாலாந்தாரங்கூடக் கிடைப்பது அரிதாக இருந்தது. வேதராமன் செய் வகை புரியாது கண் கலங்கி நின்றார்.

துயரத்தாலும் கவலையாலும் நீலாவின் உள்ளந்தான் வாடிற்றே தவிர, உடல் பருவகாலத்தின் பூரிப்பால் செழுப்புடன் தக தக வென்று மின்னத்தான் செய்தது. அதைக்கண்டு நெடு மூச்செறிந்த விடபுருஷர் பலர். நீலாவின் அழகும் பருவமும் அவர்கள் மதியைக் கிறுகிறுக்கச் செய்தன. 'எங்கிருந்தோ ஊர்விட்டு ஊர் பிழைக்க வந்த எளிய குடும்பம். வயசான தகப்பனாரைத் தவிர நாதி இல்லாத பெண். பார்வைக்கு வெகு சுலபமானவளாகத் தோற்றுகிறாள்' என்றெல்லாம் தமக்குத் தாமே தீர்மானஞ் செய்துகொண்ட கயவர்கள் சிலர் சதா நீலா நடமாடும் இடத்தைச் சுற்றியே வட்டமிடத் தொடங்கினர். வரவர அவர்கள் உபத்திரவம் தாளமுடியாமல் தவிக்கலானாள் நீலா. வம்புப் பேச்சிலே ருசியுள்ள பெண்களில் சிலர் நீலாவின் அழகிலே ஏற்பட்ட பொறாமை உணர்ச்சி காரணமாக இந்த நிலையை உபயோகப் படுத்திக் கொண்டு இதைக் கண், காது வைத்து உருவாக்கி வாய்க்கு வந்தவாறு வம்பளக்கலாயினர். இதை யெல்லாங் கண்ட நீலாவின் மென்மையான உள்ளம் புண்பட்டுப் போயிற்று. அசம்பாவிதமான ஏதாவது சம்பவித்து விடுமோ, சம்பவிக்காத எதையாவது சம்பவித்ததாகக் கதை

கட்டிவிடுவார்களோ என்றெல்லாம் திகில் கொண்டு தவித்தாள். சுகுமாரன் பேரில் உள்ள நம்பிக்கை கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்ந்து வந்ததற்கும் சூழ் நிலையின் பயங்கர மான போக்குக்கும் வெகுவாக ஒத்துப் போகவே அவள் மனம் நிர்ப்பந்தம் காரணமாக மெல்ல மெல்ல வேறு பாதையிலே திரும்பத் தொடங்கிற்று. எப்படியாவது அந்த ஊரைவிட்டு வெளியேறிவிட்டால் தேவலே என்ற நினைவுக்கு அடிமையானாள்.

ஊர்க்காலிகளின் ஆர்ப்பாட்டங்களும் ஊர்ப் பெண்டுகளின் வம்புப் பேச்சும் வேதராமன் வரைக்கும் எட்டின. உடனே அவர் உள்ளம் அன்றொருநாள் ராஜாங்கம் சூட்சுமமாகச் சொன்ன வார்த்தைகளை நினைவு கூர்ந்தது. நாளுக்கு நாள், நிமி ஷத்திற்கு நிமிஷம் பெண்ணைப்பற்றிய கவலை அவர் உள்ளத்தை அரிக்கத் தொடங்கவே அவர் ஊண், உறக்கம் இன்றி வாடி இளைத்துத் துரும்பானார். தகப்பனாரின் அந்த நிலை வேறு நீலா வின் மனசை அறுக்கத் தொடங்கிற்று. முன்பு தகப்பனாருடைய பிரயாசைஅனைத்தும் வீண் பிரயாசையாக முடிய வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்தவள் வர வர அந்த நிலையிலிருந்து மாறி, வரன் என்று கிடைத்து, கல்யாணம் என்று ஆகி எப்படி யாவது அந்தச் சிறையிலிருந்து விடுதலை பெற்றால் போதும் என்று எண்ணும் நிலைக்கு வந்துவிட்டாள்.

இந்தச் சமயத்திலே தரகர் ஒருவர் மூலம் வரன் ஒன்று இசைந்து வந்தது வேதராமனுக்கு. சகல அம்சங்களிலும் சிலாக் கியமாகத் தோன்றிய அந்த வரன் அவர் மனத்திற்குப் பூரண திருப்தியை அளிக்கவே பெண்ணிடம் சென்று வரனைப்பற்றியும் இடத்தைப்பற்றியும் ஒரேயடியாக வருணித்து அவள் சம்மதத் தைக் கேட்டார். ஒரு சில நிமிஷம் என்னவோ யோசனை செய் தாள் அவள். பிறகு ஆவேசங் கொண்டவள் போல, "நிச்சயம் செய்து விடுங்கள் அப்பா" என்றாள். தன் க்ஷேமத்தைக் கோரும் தகப்பனாரின் சந்தோஷ நிலையைக் கண்ட அவள் உள்ளம், 'சுகு மாரன் இல்லை என்றால் அப்புறம் வேறு யாராக இருந்தால் தான் என்ன?' என்ற ஒரு முரட்டுத்தனத்தைப் பெற்றுவிட்டது.

ராஜாங்கம் தாம் கொடுத்த வாக்கின்படி நூறு வராகனை உடனே வேதராமனிடம் கொடுத்தார். ஆடம்பரமின்றி உப்பிலி யப்பன் சந்நிதியிலே கல்யாணத்தை நடத்திவிடுவது என்று இரு தரப்பினரும் சேர்ந்து தீர்மானித்தனர். முகூர்த்த தேதியும் குறிப்பிட்டாகிவிட்டது. தேதி நெருங்க நெருங்க நீலாவின் உள் ளத்திலே எல்லையற்ற கொந்தளிப்பு ஏற்பட்டு அவளைச் சித்திர வதை செய்து கொண்டே இருந்தது.

# 13. நீலாவின் மைத்துனன்

கல்யாணத்திற்கு முதல் நாள் இரவு. மணி இரண்டுக்குமேல் ஆகியும் நீலா நிம்மதியின்றிப் பெருமூச்சு விட்ட வண்ணம் புரண்டு கொண்டே கிடந்தாள். கண்களிலிருந்து தங்கு தடையின்றித் தாரையாக நீர் வழிந்தோடிக் கொண்டே இருந்தது.

'......என்ன இருந்தாலும் சுகுமாரன் மனசு வைத்து முயன்றிருந்தாரானல் எனக்கு இந்தக் கதி ஒருபோதும் நேர்ந்திராது. உம். இனி அதைப்பற்றி நினைத்து என்ன பயன்? விடிந்தால் ஒருவரின் மனைவியாகி விடப்போகிற நான் இன்னொருவரைப் பற்றி நினைப்பது தகுமா? 'பிராப்தம் என்பது தனி' என்ற முடிவை மேற்கொள்வது தவிர வேறு வழி இல்லை .....'

முடிவு காண முடியாத இந்தச் சிந்தனையிலே அவள் மூழ்கிக் கிடந்த போதே கோயிலிலிருந்து உஷத்கால பூஜையை முன்னிட்டு ஒலிக்கத் தொடங்கிய மணி ஓசை காதில் கேட்டது. வேறு எங்கோ நடைபெறும் மற்றொரு கல்யாண வீட்டினின்றும் எழுந்த மேளச் சத்தம் காதைத் துளைத்தது. சற்றைக்கெல்லாம் அவள் படுத்திருந்த அறைக்கு வெளியே மனிதர்கள் நடமாடும் சந்தடியும் பேச்சுக் குரல்களும் கேட்டன. 'உம் உம், நாழிகையாகிறது. ஏழு மணிக்குள் முகூர்த்தம் முடிந்தாக வேண்டும். பெண்ணைச் சீக்கிரம் மங்கள ஸ்நானம் செய்யச் சொல்லுங்கள்' என்ற வாத்தியாரின் வெண்கலக் குரல் அவள் காதிலே விழுந்த போது அவள் உடல் கிடு கிடென்று ஒருமுறை ஆடிற்று. இருதயம் பட் பட்டென்று அடித்துக்கொண்டது. இடது கையால் மார்பை அழுத்திக் கொண்டாள். வலது கையால் முன்றானையை எடுத்துக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். என்ன பிரயோசனம்? இறைத்த கிணறு வேகமாக ஊறுவதே போலத் துடைத்த மாத்திரத்தில் மீளவும் கண்களில் நீர் பொங்கி வழிந்தது. வாய்விட்டு ஒரு குரல் அழுதுவிட்டால் தேவலை என்று இருந்தது அவளுக்கு.

திடீரென்று அவள் மனம் திரும்பிற்று: '...அமைதியற்ற நிலைமை!......ஏன்? எதற்காக? என்னத்தை உத்தேசித்து? அதனால் என்ன லாபம்? கல்யாணத்திற்கு இசைந்தாகிவிட்டது. கல்யாணம் நடக்கிறது. இனி எதுவும் நிற்கப் போவதில்லை. இப்பொழுதும் சரி, கல்யாணம் ஆனபிறகும் சரி; நிம்மதி இல்லாமல் தவித்துக்கொண்டே இருந்தால் திடீரென்று ஒரு நாள் சுகுமாரன் வந்து மறுபடி என்னைக் கல்யாணஞ் செய்து கொண்டுவிடுவாரா? அப்படி நடப்பதோ, நடக்கவிடுவதோ

உலக சம்பிரதாயத்தில் உள்ளவையா? ஒரு காலும் இல்லை. அவ்வாறு இருக்க வீணுக்காவது மனசைப் போட்டு அலட்டிக் கொண்டே இருப்பதில் என்ன பலன்? பலன் ஒன்றும் இல்லை என்பதோடு இதனால் பலபல விபரீதங்களும் ஏற்படலாம். வேறு நினைவு மனத்திலே இருப்பது வாய்த்த கணவருக்குத் துரோகமும் ஆகும்—

நினைவு இப்படி ஓடினதும் அந்த விவேகம் மளமளவென்று அவள் மனத்தை ஆக்கிரமிக்கத் தொடங்கிற்று. ஆவேசம் வந்தவள் போல எழுந்து உட்கார்ந்தாள். சுகுமாரனை நினைத்தாள். மானசிகமாக அவனுக்கு ஒரு நமஸ்காரஞ் செய்தாள். தன் மனசைவிட்டுப் போய்விடும்படி வேண்டிக்கொண்டாள். பிறகு சற்றைக்கெல்லாம் கைப்பிடிக்க இருப்பவரை ஸ்மரித்தாள். கை கூப்பி வணங்கினாள். தன் உள்ளமெல்லாம் அவரே நிறைந்திருக்க வேண்டும் எனப் பிரார்த்தித்தாள். இவ்விரு செயல்களுக்கும் சிறு வயசு முதல், தான் ஆராதித்து வரும் தேவியைச் சாட்சி கூறினாள். அந்த அளவிலே அவள் உள்ளம் நிர்மலமாயிற்று. அதன் சாயை முகத்திலும் நிழலாடிற்று. பளிச்சென்று எழுந்து அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து அலுவல்களைக் கவனிக்கலானாள்.

காலை ஏழு மணி. கல்யாணச் சடங்குகள் மளமளவென்று நிறைவேறித் திருமங்கல்ய தாரணக் கட்டம் வந்து சேர்ந்தது. நக நகவென்று கெட்டி மேளம் முழங்க, புரோகிதர்கள் மந்திரங்களை உச்சஸ்தாயியிலே உச்சரிக்க, சுமங்கலிகள் ஒன்று கூடி நின்று 'கௌரி கல்யாணம் வைபோகமே' என்று நீட்டி முழக்கிப் பாடக் குறித்த லக்கினத்திலே நீலாவின் கழுத்திலே மூன்று முடிச்சுக்களும் அழுத்தமாகப் போடப் பெற்றன.

அப்போது அந்த இடத்திலே உருப்புரியாத ஓர் ஆரவாரம்.

"சுகுமார்!..."

"சுகுமாரனா?..."

"ஆமாம். சுகுமாரன்தான்!..."

"அவனா மயக்கம் போட்டு விழுந்தது?..."

"ஆமாம், அவனே தான்."

"எப்போது வந்தான்?"

"இப்போதுதான். வருகிறபோது நன்றாகத்தான் இருந்தான். யாரோ, 'கல்யாணக் காரன் இப்படித்தான் முகூர்த்தம் ஆனபிறகு வருகிறதோடா?' என்று கேட்டதற்குக்கூடச் சிரித்துக்கொண்டே, 'என்ன செய்கிறது? லீவு கிடைக்கவில்லை' என்றான். அண்ணாவையும் மதனியையும் கண்குளிரப் பார்த்தான். இருந்தாற்போலிருந்து மயக்கம் போட்டு விழுந்துவிட்டான்."

மணமகன் காதிலே, 'சுகுமாரன் வந்துவிட்டான்' என்ற சொற்கள் விழுந்தன; மணமகள் இருதயத்திலே கற்பாறை மோதிற்று.

'...சுகுமாரனு!...ஐயோ! அவர் ஏன் இங்கே வந்தார்? வந்து என்ன செய்யப் போகிருர்? வெறி பிடித்த நிலையில் ஏதாவது ரகளை செய்து என் வாழ்வைக் குட்டிச் சுவராக்கி விடுவாரோ? தெய்வமே! நான் என்ன செய்வேன்! நாங்கள் நட்புடையவர்கள் என்பது வெளியானுல் எல்லோரும் மனம்போன அளவுக்கு எங்கள் நட்பைக் களங்கப்படுத்திக் கதை கட்டுவார்களே!......'

"அப்பாடா! தம்பி வரவில்லையே என்று தவியாய்த் தவித்தான் நாராயணன். சுகுமாரன் வந்துவிட்டான் என்ற செய்தி காதில் விழுந்த பிறகுதான் அவன் முகத்திலே சந்தோஷக் குறி தென்பட ஆரம்பித்தது. நல்ல வேளையாக வந்த மயக்கமும் தெளிந்து அவன் கண்ணை விழித்து விட்டான். பம்பாய்க்குப் போனதிலிருந்து இப்படித்தான் அடிக்கடி மயக்கம் வருகிற வழக்கம் என்ருனும்..."

'...என்ன?...சுகுமாரன் இவர் தம்பியா? என் மைத்துனரா?...ஈசுவரா! என்னை இப்படியும் சோதிக்கலாமா?... மயக்கம், அப்புறம் தெளிவு. 'பம்பாய்க்குப் போனதிலிருந்து இப்படித்தான் அடிக்கடி மயக்கம் வருகிற வழக்கம்!'...ஆகா! என்ன புத்திசாலித்தனம்! எத்தகைய சமயோசித புத்தி! எவ்வளவு பெருந் தன்மை!.....'

முகூர்த்தம் நிறைவேறிற்று. உடனே எழுந்து உள்ளே சென்று ஸ்திரீகள் மத்தியிலே புகுந்த நீலா பிறகு வெளியே வரவே இல்லை. தப்பித் தவறிச் சுகுமாரனை நேருக்கு நேராகச் சந்திக்கும்படி நேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்று பயம்.

பிறகு சாப்பாட்டுப் பந்தி நடைபெற்றது.

"சுகுமாரன் எங்கே காணேம்?"

"அவன் அப்பொழுதே கிளம்பிப் போய்விட்டானே!"

"ஏன்? என்ன அத்தனை அவசரம்?"

"லீவு இல்லையாம். தஞ்சாவூரிலே போய் யாரையோ பார்த்துவிட்டு அப்படியே போவதாகச் சொல்லிப் போனுன்."

'அப்பாடா!...' என்று நிதானமாக, நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள் நீலா. அந்தப் பெரு மூச்சின் ஓசை அடங்கு முன்பே அவன் பால் எழுந்த அநுதாபம் அழுகையைக் கிளறிவிட்டது. 'சுகுமாரன் இனி ஒரு நாடோடிப் பரதேசி!'என்று ஓலமிட்டது அவள் உள்ளம். அவளால் அவனுக்காக அழாமல் இருக்க முடியவில்லை. தனிமையை நாடிச் சென்ருள். மனங்கொண்ட மட்டில் அழுதாள்.

# 14. குடும்பத்தில் மூவர்

"புது நாட்டுப் பெண் பொன்னுயக் காரியஞ் செய்கிருள்."

"காரியம் மட்டும் என்ன? குணமும் தங்கந்தான்."

"ஏன்? உடம்பே மினு மினுவென்று தங்க ரேக்காகத் தானே இருக்கு? மொத்தத்தில் சிவகாமிப் பாட்டி கொடுத்து வைத்தவள்; நாராயணன் கொடுத்து வைத்தவன்."

எல்லோரும் இப்படிப் பேசிக் கொள்ளும்படி நடந்து கொண்டாள் நீலா. அவள் ஓரளவு நிம்மதியோடுதான் நாட்களை ஓட்டினுள். என்றாலும், 'வாரந் தப்பாமல் கடிதாசு போட்டுக் கொண்டிருந்த குழந்தையிடமிருந்து வெகு நாட்களாக ஒரு கடிதாசுகூட இல்லையே!' என்று சிவகாமி அடிக்கடி ஏங்கிப் புலம்புகிற பொதல்லாம் அவள் உள்ளம் சுரீர் சுரீர் என்று வேதனைப் படத்தான் செய்தது. அந்த நிலைக்குக் காரணம் தான் தானே என்று மாய்ந்து போனுள் அவள்.

நாராயணன் சுகுமாரனுக்கு எத்தனையோ கடிதங்கள் எழுதினுர். ஒன்றுக்குமே பதில் இல்லை. இதே வியாகுலத்தால் உடலும் உள்ளமும் மெலிவடைந்த சிவகாமி நாளடைவில் படுத்த படுக்கையாகி வெகு சீக்கிரத்தில் ஒடுங்கிப் போய் விட்டாள். நிலைமை மோசமாகி, பிழைப்பதே அரிது என்ற நிலை ஏற்பட்டு விட்டது. நாராயண சர்மா சுகுமாரனுக்கு, 'அம்மா இனிப் பிழைக்க மாட்டாள். உன்னைப் பார்க்கத் துடிக்கிருள்' என்று தந்தி கொடுத்தார். சுகுமாரன் உடனே கிளம்பிப் பறந்து விழுந்துகொண்டு வந்தான். அதற்குள் இங்கே காரியம் மிஞ்சிப் போய்விட்டது.

தாயின் உடலைக் கூடக் காணக் கொடுத்து வைக்காத சுகுமாரன் அவள் ஜீவனை விட்ட இடத்திலே விழுந்து புரண்டு அலறினுன். தன் சிறு பிள்ளைப் புத்தியை நொந்துகொண்டான். அவன் நிலை கண்டு சர்மாவும் நீலாவும் கண்ணீர் உகுத்தனர்.

கிரியைகள் முடிந்து மூன்று நாட்கள் ஆனபின்பும் சுகுமாரன் பம்பாய் செல்லும் பிரஸ்தாபத்தையே காணேும். நீலாவின் உள்ளம் குழம்பிற்று. மேலும் ஒன்று, இரண்டு என நாட்கள் ஓடிக்கொண்டே இருந்தன. கம்பெனியிலிருந்து அவனுக்குப் பல கடிதங்கள் வந்துவிட்டன. அவன் எதையுமே பொருட்படுத்தவில்லை. 'இதுவே கடைசிக் கடிதம். உடனே வராவிட்டால் வேலையினின்றும் நீக்கப்படும்' என்று வந்த கடிதத்தையும் அவன் லட்சியஞ் செய்யவில்லை. பிறகு வேலையிலிருந்து நீக்கி விட்டதாகக் கடிதம் வந்தது. அதுவும் அவன் இருதயத்தைத்

தொடவில்லை. இதையெல்லாம் அறிந்த நீலா ஏதோ பயங்கரம் தன்னைச் சூழ்ந்து உருவாவதாக உணர்ந்தாள்.

சுகுமாரன் வேலைக்குத்தான் போகவில்லை; வீட்டிலாவது சரிவர நடந்துகொண்டானு என்றால் அதுவும் இல்லை. காலையில் கிரமமான வேளையில் படுக்கையை விட்டு எழுந்திருப்பதில்லை. நாராயண சர்மா அதிகாலையிலேயே காபி சாப்பிட்டு விட்டு வயல் வெளிக்குப் போய்விடுவாராகையால் நீலா அவனுக்கான சிற்றுண்டி, காபி முதலியவற்றை அவன் எழுந்துவிட்டதை அறிந்து சுடச் சுடத் தயார் செய்து வைத்துக்கொண்டு காத்திருப்பாள். அவன் எங்கோ கிளம்பிப் போய்விடுவான். காரணம் காரியம் இல்லாமல் எங்கெல்லாமோ போய்ச் சுற்றி விட்டு உச்சி வேளைக்குமேல் வீடு திரும்புவான். நாராயணன் தீவிரமாக வற்புறுத்துவார். அந்த மாதிரி சமயங்களில் நீராப் பொறியே என்று குளிக்காமல் முழுகாமல் இரண்டு கவளம் வேண்டா வெறுப்பாகச் சாப்பிட்டு வைப்பான். அவனுடைய இங்கிலைக்குக் காரணம் புரியாமல் தவித்தார் நாராயணன்; காரணம் புரிந்து தவித்தாள் நீலா. இதனால் அவள் தன் கணவனிடம் பூரண சந்தோஷத்துடன் நடந்து கொள்ள மாட்டாமல் கிடந்து தத்தளித்தாள்.

நாராயண சர்மா ஒரு நாள், "ஏன் சுகு, எதையோ பறி கொடுத்தவன் போல இப்படி ஏக்கத்துடன் நீ முடங்கிக் கிடக்கக் காரணந்தான் என்ன?" என்றார்.

'காரணம் இருக்கத்தான் இருக்கிறது. பறிகொடுத்துவிட்டுத்தான் தவிக்கிறேன்' என்றது அவன் உள்ளம்.

"நீ இப்படி இருப்பது என் மனசை மிகவும் பாதிக்கிறது. என் மனசை மட்டும் என்ன? உன் மதனிதான் என்னைவிட அதிகமாகக் கவலைப்படுகிறாள் உன்னைப்பற்றி."

'நியாயந்தானே?' என்றது அவன் மனம்.

"வாய் திறந்து ஒன்றுமே சொல்லமாட்டேன் என்கிறாய். எங்களை மிகவும் சோதிக்கிறாயே சுகு."

"உங்களுக்குக் கஷ்டமாக இருந்தால் நான் இப்போதே வீட்டை விட்டுப் போய்விடுகிறேன்."

அவன் மனசார இப்படிச் சொல்ல நினைக்கவில்லை. தவறிப் போய் வார்த்தைகள் வெளிவந்துவிட்டன. அந்தச் சொற்கள் அண்ணாவின் உள்ளத்தை என்ன பாடு படுத்தும் என்று அவனுக்குத் தெரியும். அதை மாற்ற, மழுப்பிப் பேச, மன்னிப்புக் கோர அவன் தன்னைத் தயார் செய்துகொள்ளு முன் அவர் அப்பால் போய்விட்டார். அதன் பிறகு அவர் அவன் வழிக்கே போவதில்லை. அவன் உள்ளத்திலே இன்னும் ஒரு சுமை ஏறிற்று.

# 15. நல் உபதேசம்

ஒருநாள் ஏதோ ஒரு முக்கிய காரியத்தை முன்னிட்டுச் சீக்கிரமாகவே சாப்பிட்டுவிட்டு வெளியூர் சென்ருர் நாராயண சர்மா. மாலை ஏழு மணி ரெயிலில் திரும்பி வருவதாகவும் சுகுமாரனைக் கவனித்துக்கொள்ளும்படிக்கும் நீலாவிடம் சொல்லி விட்டுத் தம்பிக்கும் புத்திமதிகள் கூறிவிட்டுச் சென்ருர். ஆனல் சுகுமாரனே நீலாவோ அவர் கூறிச் சென்றபடி நடந்து கொள்ளவில்லை. அவர் பத்தரை மணிக்குக் கிளம்பிச் சென்ருர். மணி பதினென்று, பன்னிரண்டு என்று ஓடி ஒரு மணியும் அடித்துவிட்டது. சுகுமாரன் தன் அறையிலே முடங்கிக் கிடந்தான். நீலா சமையல் அறையிலே சுருட்டி முடக்கிப் படுத்துக் கொண்டிருந்தாள். அவன் அனலைக் கக்கும் பெருமூச்சுக்களை விட்டுக்கொண்டிருந்தான். அவள் மௌனமாகக் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தாள்.

கூடத்தில் இருந்த கடிகாரம் இரண்டு முறை ஒலித்து ஓய்ந்தது. நீலாவின் உணர்வு விழித்து எழுந்தது. உடனே அவளும் எழுந்து உட்கார்ந்தாள். பலவாறு யோசித்தாள். விறுக்கென்று எழுந்தாள். சுகுமாரன் இருந்த இடத்தை நோக்கி விரைந்தாள். "சாப்பிட வரவில்லையா?" என்ருள். அவன் சட்டென்று திரும்பிப் பார்த்தான். மதனி—மைத்துனன் உறவுக்குப் பின் முதல் முதலாக அவன் அவள் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்தான். அப்பா! அந்தப் பார்வைதான் எப்படி இருந்தது!

"மணி இரண்டுக்குமேல் ஆகிறதே! சாப்பிட வரவில்லையா?"

"இல்லை. நான் சாப்பிடவில்லை."

"ஏன்?"

"அதைப்பற்றி உனக்கேன் கவலை?"

"இப்படியெல்லாம் பேசாதீர்கள். இது சரியில்லை."

"நான் எப்போதும் சரியாகப் பேசுகிறவன்தான்; சரியாகவே நடந்துகொள்கிறவன்தான். உன்னைப் போல்..."

"சரி. அதையெல்லாம்பற்றி அப்புறம் பேசிக்கொள்ளலாம். முதலில் சாப்பிட வாருங்கள்."

"எனக்குத்தான் சாப்பாடு வேண்டாம் என்றேனே!"

"சு...கு...மா...ர்...!"

அவள் தொண்டை விக்கிற்று. கண்களில் நீர் நிறைந்தது.

"இத்தனை நாளும் அதி புத்திசாலித்தனமாக நடந்துகொண்டீர்களே? அதைக் கண்டு நான் அளவு கடந்த உவகை கொண்டேனே? திடீரென்று இப்போது என்ன வந்துவிட்டது, உங்களுக்கு? ஏன் இப்படி மாறிவிட்டீர்கள்?"

அவன் விரக்தியோடு கோரமாக நகைத்தான்.

"நான் இத்தனை நாளும் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டேன்; அதைக் கண்டு நீ உவகை கொண்டாயா? இருக்கலாம். நீ உவகை கொண்டது உண்மையாக இருக்கலாம்; உன் வரையில் அது சரியாகவும் இருக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்த வரையில் நீ கொண்ட அநுமானம் மிகவும் தவறு. சென்னையிலே உன்னைப் பிரிந்ததிலிருந்து பித்தனாக அலைந்தேன். நீ என்னை மோசஞ் செய்துவிட்டதை அறிந்ததும் வெறியனாக மாறினேன். அந்த க்ஷணம் முதல் இந்த க்ஷணம் வரையில் என் உள்ளம் எரிமலையாகத்தான் குமுறிக்கொண்டிருக்கிறது. அதை நீ என்ன கண்டாய்? கண்டாலுந்தான் உன் நெஞ்சிலே எங்கே...?"

"நீங்கள் இப்படித்தான் நினைத்துக் கொண்டிருப்பீர்கள் என்று எனக்கு முன்பே தெரியும். நடந்த விவகாரங்களையெல்லாம் அறிந்தால் நீங்கள் இப்படிப் பேசமாட்டீர்கள்."

"என்ன நடந்துவிட்டது? அதையுந்தான் சொல்லேன்."

"லேசில் முடிந்துவிடுகிற விஷயம் அல்ல அது. தயவு செய்து சாப்பிட வாருங்கள். அப்புறம் எல்லாம் சொல்கிறேன்."

அவன் மனம் என்ன நினைத்ததோ, பளிச்சென்று எழுந்தான். சாப்பிடச் சென்றான். அவள் மளமளவென்று பரிமாறினாள். அவன் வேண்டா வெறுப்புடன் சடசடவென்று சாப்பிட்டான். இடையே, 'வேண்டும்' அல்லது 'வேண்டாம்' என்பன போன்ற சொற்களைத் தவிர வேறு பேச்சு இல்லை. அவன் எழுந்து சென்றதும் அவள் சாப்பிட்டாள். பிறகு சமையல் அறைக் காரியங்களை முடித்தாள். கூடத்து அறைக்குச் சென்றாள்.

அவன் அவளைத் தேடிக்கொண்டு வந்தான்.

"என்னவோ சொல்கிறேன் என்றாயே?"

"சொல்கிறேன். உட்காருங்கள்."

அவன் உட்கார்ந்தான். அவள் சொல்ல ஆரம்பித்தாள். சென்னையிலிருந்து வந்தது முதல் கல்யாணம் நடைபெற்றது வரை அனைத்தையும் சொன்னாள். இடைக் காலத்தில் அவனை நினைந்து ஏங்கினது, கடைசியாக மனசிலே உறுதியான தீர்மானங்கொண்டது, கல்யாணத்திற்கு வந்து விட்டுப் போன பிறகு அவனிடமிருந்து கடிதம் வராததைக் குறித்துக் கவலைப்பட்டது, அவன் வந்ததிலிருந்து அவள் மனம் வேதனைப் படுவது—ஆகிய அனைத்தையும் அணு அணுவாகச் சொன்னாள். கடைசியில், "நான்தான் கிணற்றுத் தவளையாக ஆகிவிட்டேன்; சிறகொடிந்த பட்சியாகப் போய்விட்டேன். என்னால் எதுவும் ஆக

வில்லை. நீங்களாவது போதிய முயற்சி எடுத்திருக்கக்கூடாதா?'' என்று கேட்டாள். அவன் நீண்ட பெருமூச்சு விட்டான்.

''நான் எவ்வளவு முயற்சி எடுத்திருப்பேன் தெரியுமா? ஊர் ஊராகச் சென்று, வீடு வீடாகச் சென்று உன்னைத் தேடி அலுத்துப் போனேன். ஒரு தகவலும் கிட்டவில்லை. அந்த ஏக்கத் தினால்தான் பம்பாயைப் பார்க்கத் தொலைந்தேன். இனி இந்த ஜன்மாவில் உன்னைக் காணப் போவதில்லை என்றுதான் முடிவு கட்டிக் கொண்டிருந்தேன். அத்துடன் என் வாழ்க்கை பாழ்த் தது, நடைப் பிணமாக நடமாட வேண்டியதுதான் என்றும் தீர்மானித்தேன். எண்ணத்திலே இல்லாத முறையில் உன்னைக் கண்டேன். அதனால் நடைப் பிணமாக நடமாடுவதுகூடக் கூடாது என்ற முடிவை மேற்கொண்டேன். இதுதான் என் வாழ்வின் கடைசி நாள்.''

''அதுதான் தவறு. மேதாவியான உங்கள் புத்தி இந்த விஷயத்திலேதான் பலஹீனமடைந்து காண்கிறது. விவேகம் நிறைந்த நீங்கள் பச்சைக் குழந்தையாக......''

'' அது என்னவோ, உன்னால் கடின சித்தத்துடன் இருக்க முடிகிறது; பேச முடிகிறது. என்னால் அது சாத்தியமாக இல்லை. இந்த உலகத்தில் எனக்குச் சகலமும் நீதான் என்று இருந்தேன். ஆனாலும் உன் மனம் இத்தனை தூரம் மாறும் என்று......''

''நான் மாத்திரம் நினைத்தேனா? எதிர்பார்த்தேனா? எல்லாம் விதி செய்த கூற்று. அது எதிர் நின்று எண்ணத்திற்கு மாறாகக் காரியங்களை நிகழ்த்தி வைத்த பின் நடந்து போனதை எண்ணி எண்ணித் துக்கித்து உடலையும் உள்ளத்தையும் குட்டிச்சுவராக அடித்துக்கொள்வதிலே என்ன பயன் என்கிறீர்கள்?''

'' அனைத்தையும் மறந்துவிட வேண்டும் என்கிறாய்.''

'' சந்தேகம் இல்லாமல்.''

''அன்று நாம் பழகிய பழக்கத்தை, கொண்ட பாவனையை, நினைத்த நினைப்பை அடியோடு மறந்துவிட வேண்டும்; தினசரி வாழ்க்கையிலே நூற்றுக் கணக்கிலே, ஆயிரக் கணக்கிலே தோன்றி மறையும் சர்வசாமான்யமான நிகழ்ச்சிகளில் ஒன்று கப் பாவிக்க வேண்டும் என்கிறாய். அப்படித்தானே?''

'' வேறு வழி?''

'' உன்னால் அது சாத்தியமாகிவிட்டது. ஒருவருக்கு அளித்த உன்னதமான பொருளை இன்னொருவருக்கு அளித்து மகிழ்ச்சி பெறக்கூடிய ஆற்றலை நீ படைத்திருக்கிறாய். என்னால் முடியாது.''

''திரும்பத் திரும்பப் பழைய பல்லவிதான். எனக்கு மட்டும் சுலபமாக இருந்ததா, அங்கிலை! இவ்வளவு நேரந்தான் எல்லா வற்றையும் கதை கதையாகச் சொன்னேனே?''

"எப்படியோ, முடிந்துவிட்டது அல்லவா?"

"உங்களாலும் முடியும்."

"ஒரு போதும் இல்லை."

"அது வெறும் பிரமை. சிறிது காலம் இதே நினைவாக ஏக்கத்துடன் தவியாய்த் தவித்துக்கொண்டு இருப்பீர்கள். எதுவும் மனசுக்குக் கசப்பைத் தரும். காலம் போகப் போக அந்தக் கசப்பு சிறுகச் சிறுகக் குறைந்து சரியான நிலைமை தன்னாலே ஏற்பட்டு விடும். காலத்திற்கு அத்தனை சக்தி உண்டு."

"இது உன் சித்தாந்தமாகலாம். என் மனம் ஏற்காது."

"இப்போதைக்கு ஏற்காதுதான். காலப் போக்கிலே ஏற்றுக்கொள்ளும்; ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அவ்வாறு உங்கள் மனசைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று நான் உங்களை வேண்டிக் கொள்கிறேன்."

"எனக்கும் உனக்கும் இனி என்ன சம்பந்தம் இருக்கிறது, நீ வேண்டிக்கொள்ளவும் நான் அதன்படி நடந்துகொள்ளவும்?"

"ஏன் இல்லாமல்? நான் உங்கள் மதனி இல்லையா? அம்மா கடைசிக் காலத்தில் என்ன சொன்னார்கள் என்பதை......"

"அவள் என்ன கண்டாள், நம்முடைய அந்தரங்கங்களை?"

"அவற்றை எல்லாந்தான் அடியோடு மறந்துவிடவேண்டும் என்றேனே! சுகுமார், முன் காலத்துப் பெரியோர்களைப் படு கர்நாடகம் என்று இந்தக் காலத்தவர்கள் சுலபமாகக் கேலி செய்கிறார்கள். பார்க்கப்போனால் அவர்களுடைய மேதைதான் போற்றத் தகுந்தது. அவர்கள் வினைத் தெரிந்த பெண்ணையும் பிள்ளையையும் நெருங்கிப் பழக விடுவதே இல்லை என்று தெரிகிறது. அது எத்தனை நல்லது என்பது நம்போன்ற அநுபவம் உடையவர்களுக்குத்தான் தெரியும். இன்று நம்மைப்போல் இன்னும் எத்தனை எத்தனையோ பேர் இருக்கிறார்கள். சிறு போதில் களங்கம் அடையாதிருப்பவர்கள் பாடு பரவாயில்லை. மற்றவர்கள் நிலை?— "

"மனசு அளவிலே ஏற்பட்ட களங்கம் மட்டும் களங்கத்தைச் சேர்ந்ததில்லையோ?"

"கடைசியாக அதைத்தான் சொல்ல வந்தேன். வினைத் தெரியாத பிராயங்களிலே நாம் எவ்வளவோ விளையாட்டுக்களை விளையாடியிருக்கிறோம். வினைத் தெரிந்த பிறகு அந்த விளையாட்டுக்களில் ஒன்றாவது நம் நினைவுக்கு வருகிறதா? அத்தகைய விளையாட்டுக்களில் ஒன்றாகத்தான் நாம் இப்போது பாவித்துக் கொள்ள வேண்டும், அன்றைய நம் நட்பை."

"உன் உபதேசங்கள் கேட்பதற்கு நன்றாக இருக்கின்றன. நடைமுறைக்கு ஒவ்வாதது. அதுவும் என் வரையில்......"

"இது முரட்டுப் பிடிவாதப் பேச்சு. இதோ பாருங்கள், நீங்கள் சந்தோஷமாக இருந்தால்தான் நான் சந்தோஷமாக இருக்க முடியும். நான் சந்தோஷமாக இருந்தால்தான் உங்கள் அண்ணு சந்தோஷமாக இருப்பார். நீங்கள் தாறுமாருக நடந்து கொண்டால் அதனுல் நீங்கள், நான், உங்கள் அண்ணு மூவரும் பாதிக்கப்படுவோம். இதை நீங்கள் இனி ஒவ்வொரு கணமும் மறக்கக்கூடாது. இதையெல்லாம்பற்றி நிதானமாக, சாவகாசமாக யோசித்துப் பாருங்கள்."

இப்படிச் சொல்லிக் கொண்டே அவள் பளிச்சென்று எழுந்து அப்பாற் போய்விட்டாள். அவனும் தன் அறையிலே சென்று படுத்தான். நீலாவின் விவேகமான பேச்சு அவன் உள்ளத்திலே ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது.

மணி நாலு அடித்தது.

"காபி ஆறிப்போகிறதே, எழுந்திருக்க வில்லையா ?"

அவன் சட்டென்று அவளைத் திரும்பிப் பார்த்தான். வாய் திறவாமல் எழுந்து தோட்டத்துப் பக்கம் சென்ருன். அவன் திரும்பி வந்ததும் அவள் காபி கொடுத்தாள். அவன் அதைக் குடித்துவிட்டு எங்கோ வெளியில் சென்ருன். இரவு எட்டு மணிக்குத் திரும்பி வந்தான். சாப்பிட்டான். தன் அறையிலே சென்று படுத்தான். யாவும் மௌனமாகவே. அவன் தலை நிமிர்ந்து அவளைப் பார்க்கவில்லை. வாய் திறந்து ஏதும் பேசவில்லை. அவளும் அவன் போக்கிலே குறுக்கிடவில்லை. 'நம் புத்திமதிகள் சுகுமாரன் மனத்திலே புகுந்து வேலை செய்கின்றன. செய்யட்டும்' என்று எண்ணிக் கொண்டாள் அவள்.

மணி பத்து அடித்தது. கணவரின் வருகையை எதிர்பார்த்து அதுவரையில் சாப்பிடாமல் காத்திருந்த நீலா, 'ஏழு மணி ரெயிலில் அவர் வரவில்லை போல் இருக்கிறது' என்ற முடிவுடன் தன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு கூடத்து அறையிலே சென்று படுத்தாள். உடல் அசதியால் சற்றைக்கெல்லாம் கண் அயர்ந்து போனுள்.

முன்புறத்து அறையிலே கட்டிலிலே படுத்திருந்தான் சுகுமாரன். நேரம் செல்லச் செல்ல அவன் உள்ளத்திலே மத்தியான்னம் அவள் செய்த நல் உபதேச மொழிகள் யாவும் தெய்ந்து மறைந்து கொண்டே போயின. பட்டணத்திலே இருவரும் உல்லாசப் பறவைகளாக அன்று இருந்த நிலையையும் இன்று ஒரே வீட்டிற்குள் கூண்டுக் கிளிகளாக இருக்கும் நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்து உள்ளங் குமுறியபடி படுக்கையிலே புரண்டு கொண்டு கிடந்தான் அவன். பொழுது ஓடிக் கொண்டிருந்தது.

# 16. எரிமலை

இரவு மணி பன்னிரண்டு. வான வீதியிலே அரசு புரியும் வெண்மதி அமுதமயமான தண் கிரணத்தை அள்ளி இறைத்தவாறு உல்லாசமாகப் பவனி வந்துகொண்டிருந்தது. மெல்லென வீசிய மந்த மாருதம் எங்கும் நிறைந்து தவழ்ந்தோடும் போக்கிலே அந்த அறையின் ஜன்னல் வழியே உள்ளே சென்று வெப்பத்துடன் கூடிய சுகுமாரனின் உடலையும் இதமாகத் தடவிக்கொடுத்துவிட்டுச் சென்றது. குளுமையான அந்தக் காற்றின் ஸ்பரிசம் அவனுக்கு எரியுந் தீயிலே எண்ணெயை வார்த்தாற்போன்று இருந்தது. மெத்தென்ற பஞ்சணை மூட்பரப்பாக உறுத்திற்று. ஜன்னல் இடுக்கு வழியே உள்ளே விழுந்து கிடந்த கிரணத் துண்டு எதிரே உள்ள தோப்பில் வானளாவி நிற்கும் தென்னை மட்டை ஓலைகளின் சலசலப்பினால் இப்படியும் அப்படியுமாக ஆடி ஜாலங்காட்டி அவன் நிலை குறித்துக் கேலி செய்து சிரித்தது. கொடிய தாப ஜுரத்திலே கிடந்து தத்தளிப்பவன் போலத் திணறித் திணறி நெடுமூச் செறிந்தபடி அதையே கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த அவன் அந்த ஒளிப்பரப்பின் மத்தியிலே நீலாவின் அழகு முகத்தைக் கண்டான். சற்று நேரம் அதையே உற்றுப் பார்த்தான். தன்னையே கண் கொட்டாமல் பார்க்கும் அந்த முகத்திலே ஒரு சலனம். லேசான கண் இமைப்பு. மூடியிருந்த அதரங்களிலே ஒரு நெளிவு. பல் வரிசை சற்றே தெரிந்தும் தெரியாமலும் ஒரு மோகனப் புன் முறுவல். உதடுகளின் அசைவு. மெல்லிய குரலோசை:

"சுகுமாரா என் தாபம் தனை நீ அறியாயோ மாரா!"

'சுகுமார், இந்த நீலா என்றும் உங்களுடையவள் தான். கிணற்று நீரை வெள்ளமா கொண்டு போய்விடும்?'

அவனால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. வெறி தலைக்கேறி விட்டது. தன்னை மறந்தான். பரபரப்புடன் எழுந்தான். நீலா படுத்திருந்த அறையை நோக்கி விரைந்தான். படபடவென்று கதவைத் தட்டினான். அயர்ந்த தூக்கத்தில் இருந்த நீலா திடுக்கிட்டுக் கண் விழித்தாள். நிலைமையைச் சட்டென்று அவளால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. 'கணவர் தாம் வந்து விட்டாரோ! அவர்தாம் கதவை இடிக்கிறாரோ!' என்றுதான் அவள் நினைவு ஓடிற்றே தவிரச் சுகுமாரன் வந்து அந்த அகாலத்திலே தான் படுத்திருக்கும் அறைக் கதவைத் தட்டுவான் என்று அவள் மனம் நினைக்கவேயில்லை. மெல்ல எழுந்தாள். கதவோரம் வந்தாள். ஆனால் அதற்குள்........

அபாயம் எதுவும் நேராது என்கிற அசட்டை மனப்பான்மை யோடு அவள் கதவை நன்கு கவனித்துத் தாளிடாமல் இருந்த தாலோ, சுகுமாரனின் கை வலுவினுலோ, அவன் நெட்டித் தள்ளினதும் கதவு திறந்து கொண்டது. அவன் கன வேகமாக உள்ளே நுழைந்தான். அவள் அவனைக் கண்டு அரண்டு போய் விடவில்லை. நிதானமாகவே வரவேற்ருள். வழக்கமான புன் சிரிப்புக்கு அப்போதும் குறைவில்லை. ஆனல்... அவன்?... வெடித்து நின்ற எரிமலையிலிருந்து சிதறி வழிந்தோடும் தீக் குழம்பின் மீது நிற்பவன் போல் துடியாய்த் துடித்தான். அவன் நிலை கண்டு அவள் சிரித்தாள்.

" திடீரென்று உங்களுக்கு என்ன நேர்ந்தது? "

" திடீரென்ரு ? எப்போதும் ஓயாத அலைதானே என் உள் ளக் கடலிலே!"

" அப்படியானல் என் உபதேசமெல்லாம் வீண்தானு? "

" உ...ப...தே...ச...ம்! நீலா! நீ ஒரு பெண்தானு?"

" என்னைப் பார்த்தால் எப்படித் தோன்றுகிறது ?"

" பார்வை அளவில் சரிதான். ஆனல் உணர்ச்சிகள்... "

" உணர்ச்சிகள்! ஹூம்! நான் அதை யெல்லாம் ஆழக் குழி தோண்டிப் புதைத்துவிட்டு அதன்மீது நடமாடி வருவது இன் னமுமா உங்கள் புத்திக்கு எட்டவில்லை? "

" அதெல்லாம் வெளியுலகத்திற்குக் காட்டும் வெளிச்சம் என்று......"

"சுகுமார்! என்ன சொன்னீர்கள்? என்னை நன்ருக நிமிர்ந்து பார்த்துப் பேசுங்கள்! அதோ, படத்திற்குள்ளிருந்து எட்டிப் பார்க்கும் அண்ணுவின் நிர்மலமான முகத்தைப் பாருங்கள்!..."

அவன் முகம் மாறுபட்டுக் காட்சியளித்தது. கண் இமை களும் உதடுகளும் பட பட வென்று துடித்தன. சற்றுமுன் அழகிய பொற்பதுமை போன்று தோற்றமளித்தவள் சற்றைக் குள் பத்திரகாளிபோல மாறி நின்ருள். அவன் நிலையும் அவள் நிலைக்குச் சற்றும் தாழ்ந்ததாக இல்லை. வெறியேறித் துடி துடித்துக் கொண்டிருந்த அவன் கண்ணுக்கும் கருத்துக்கும் அவள் முன்னிலும் அழகியாகத் தோற்றமளித்தாள். அவன் கையும் காலும் பதறின. பதறின கையை அவள் எதிரே நீட்டிய படி, " நீலா!...... " என்று என்னவோ சொல்ல வாயெடுத் தான். அவள் அவன் நிலையைப் புரிந்து கொண்டுவிட்டாள்.

"சுகுமார்! போங்கள்! உங்களுக்கு உடம்பு சரியாக இல்லை. உங்கள் அறைக்குப் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்.—"

"நான்...நான்..." என்று என்னவோ சொல்லிக்கொண்டே அவளைச் சமீபித்தான் அவன். தன் கரத்தை நீட்டி அவள் கரத்தைப் பற்ற முயன்றான். அப்போது.......

வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. நாராயண சர்மா வண்டிக்காரனோடு என்னவோ பேசுங் குரலுங்கேட்டது. அவள் அவனை அறையைவிட்டுப் போய்விடும்படி ஜாடை செய்தாள். அவன் நகரவில்லை. போக முடியாது என்று மறுக்கும் பாவனையில் தலையை அசைத்தான். இதற்குள் நாராயணன் பட பட வென்று கதவைத் தட்டினார். நீலா சுகுமாரனைக் கையெடுத்துக் கும்பிட்டு மௌனமாக வேண்டினாள். அவன் மனம் என்ன எண்ணிற்றோ என்னவோ, பளிச்சென்று அவ்விடத்தை விட்டு வெளியேறித் தன் அறையை நோக்கி விரைந்தான். அவள் உடலையும் உள்ளத்தையும் நிதானப் படுத்திக் கொண்டு சென்று கதவைத் திறந்தாள். அவர் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார். அந்தப் பார்வையும், "அயர்ந்த தூக்கம் போல் இருக்கு" என்ற சிறு நகையுடன் கூடிய அவர் வார்த்தைகளும் அவள் நெஞ்சைக் குறு குறுக்கச் செய்தன. குனிந்த தலை நிமிராமல் மௌனமாக உள்ளே சென்றாள். அவர் அத்துடன் விடவில்லை. "ஏன் என்னவோ போல் இருக்கிறாய் நீலா? உடம்பிற்கு ஏதாவது அசௌகரியமா?" என்றார். "ஒ...ன்...று...ம்... இ...ல்...லை...யே..." என்ற பதிலைச் சொல்லி முடிப்பதற்குள் அவள் பட்ட பாடு!

"போன இடத்திலே காரியம் தாமசம் ஆகிவிட்டது. ஏழு மணிக்கு வருகிற ரெயில் தவறிவிட்டது. போட்மெயிலில் வந்து பக்கத்துப் பெரிய ஸ்டேஷனில் இறங்கி வண்டி வைத்துக் கொண்டுவந்தேன். முன்னெல்லாம் நான் வெளியூர்சென்றால் இப்படிப் பறந்துகொண்டு வீடு திரும்புவதில்லை" என்று சொல்லிக் கொண்டே சட்டையைக் கழற்றினவர் நீலாவின் முகத்தை அர்த்த புஷ்டியுடன் பார்த்தார். அவளுக்கு அவர் பேச்சின் தாற்பரியம் விளங்கிற்று. ஆனால் அதை அநுபவிக்கவோ, அவர் பேச்சின் சாரத்தைத் தான் புரிந்து கொண்டதாகக் காட்டிக் கொள்ளவோதான் அவளால் முடியவில்லை. நாராயண சர்மா அவளைச் சமீபித்துச் சுகுமாரனைப் பற்றித் தாழ்ந்த குரலில் கவலையோடு விசாரித்தார். அவள் ஓரளவு திருப்திகரமாகப் பதிற் சொல்லவே அவருக்குச் சந்தோஷம் சிறிது ஏற்பட்டு விட்டது. அதன் விளைவாக, "எனக்குத் தெரியுமே, என் தங்கத்தின் சாமர்த்தியம்!" என்று சொல்லிக்கொண்டே அவள் மோவாயைப் பிடித்தார். அப்போது அவர் கை அவள் இருதயத்திலே பட்டது. உடனே திடுக்கிட்டு, "உன் இருதயம்

ஏன் இப்படி அடித்துக்கொள்கிறது நீலா?'' என்றார். அவள் மிகுந்த பிரயாசையுடன் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு "இது எனக்கு வழக்கந்தான். நல்ல தூக்கத்திலே திடீரென்று விழித்தெழுந்தால் இருதயம் படபடக்கும்; தலைவலியும் ஏற்படும்'' என்று சாதுரியமாகப் பதில் சொன்னாள்.

கணவரின் சாப்பாடு முடிந்ததும் அவருக்குத் தாம்பூலம் அளித்துப் படுக்கை போட்டுக் கொடுத்துவிட்டுப் பழையபடி ஏற்கனவே படுத்திருந்த அறையிலே சென்று படுத்தாள் நீலா. சர்மாவின் மனம் அப்போது சற்றே நிம்மதியைப் பெற்றிருந்தது. ஆனால் சுகுமாரன், நீலா இருவர் உள்ளங்களிலும் பெரும் பெரும் அலைகள் எழுந்து மோதிய வண்ணம் இருந்தன. ஒவ்வோர் அலையும் ஒன்றைவிட ஒன்று பெரிது. சீறிச் சீறி எழுந்து மோதிய அவை கரையையே உடைத்தெறிந்து விடும் போன்று இருந்தன. 'இன்று இப்படி ஆயிற்று. ஆனால் என்ன? என்றோ ஒரு நாள்...அதுவும் வெகு சீக்கிரத்திலேயே...' என்று ஆர்ப்பரித்தது சுகுமாரனின் அரக்க உள்ளம். அதே வார்த்தைகளைத்தான் அங்கேயும் உச்சரித்துக்கொண்டிருந்தது, நீலாவின் மென்மை வாய்ந்த பெண் மனமும். விஷயம் ஒன்று தான்; ஆனால் அதைப்பற்றி நினைக்கும் முறையிலேதான் இரண்டு இடங்களிலும் வித்தியாசம். அவனிடம் வெறி; அவளிடம் பீதி!

'சுகுமாரன் போகிற போக்கைப் பார்த்தால் அசம்பாவிதமான ஏதாவது சம்பவித்து விடும் போல் இருக்கிறதே! என் உபதேச மொழிகளில் ஒன்றுகூட அவர் உள்ளத்தைத் தொடவில்லையே! இன்று...இன்னும் சற்று நேரம் அவர் வராதிருந்திருந்தால்? ஐயோ! இப்படிப்பட்ட நிலையிலே......இங்கே இருந்துகொண்டு...நாம்...எப்படி...'

சிந்தனையின் வலுவினால் அவள் தலை கிர்ரென்று சுழன்றது. மயக்கமான ஒரு நிலை. உடலிலே ஒரு கூச்சம். உள்ளத்திலே உருப் புரியாத ஒரு ரகளை. இருதயம் கன வேகமாக ஓடத் தொடங்கிற்று. வர வர ஓட்டத்தின் வேகம் அதிகரித்தது. கண்மண் தெரியாமல் ஓடும் மனிதனுக்கு எதிரே பெரிய பாறை ஒன்று தோன்றி மண்டையிலே மடார் என்று மோதினாற் போன்ற ஓர் அதிர்ச்சி. அந்த அளவில் அவள் இருதய ஓட்டம் ஒரு கணம் டக் என்று நின்று விட்டாற் போன்று இருந்தது. இருதயத்திலிருந்து என்னவோ நழுவி விட்டாற் போன்ற உணர்ச்சி. மறுபடியும் இருதய ஓட்டம் ஆரம்பம் ஆனபோது அதில் முன்பு இருந்த வேகம் இல்லை. இயற்கையான வேகங்கூட இல்லை. அந்த நிலையில் பிரக்ஞை அவளிடமிருந்து பிரிந்தது.

# 17. புனர்ஜன்மம்

பொழுது புலர்ந்தது. வெகு நேரம் ஆகியும் நீலா அறையை விட்டு வெளி வரவில்லை. நாராயணன் அவள் படுத்திருந்த அறைக்குள் நுழைந்தார். அவளைச் சமீபித்தார். இரண்டு குரல் கூப்பிட்டார். பதில் இல்லை. தோளில் கை வைத்து அசைத்தார். அப்பா! அவள் சரீரந்தான் எப்படிச் சுட்டது! நெற்றியிலே கை வைத்தார். மழுவாய்க் கொதித்தது. எழுப்பி எழுப்பிப் பார்த்தார். அவள் எழுந்திருக்க வில்லை. சரீரத்திலே சிறு சலனங்கூட இல்லை. உடனே வெளியே வந்து ஆளைக் கூப்பிட்டு வைத்தியனை அழைத்து வரும்படி அனுப்பினார்.

உள்ளே படுத்திருந்த சுகுமாரன் சட்டென்று எழுந்து வெளியே வந்தான். "என்ன அண்ணா? வைத்தியன் எதற்கு? யாருக்கு என்ன?" என்றான். அவர் விவரத்தைச் சொல்லிப் பெருமூச்செறிந்தார். அவன் அறையில் சென்று நீலாவைப் பார்த்தான். அவள் கிடந்த கோலம் அவன் செஞ்சை உருக்கிற்று. 'இரவு பன்னிரண்டு மணி வரையில் நன்றாக இருந்தவளுக்குத் திடீரென்று இந்தக் கதியா? ஏன்? எதனால்? யாரால்?.........' கேள்விக் குறிகள் அவனைத் துளைத்தன. ஒன்றுமே தோன்றவில்லை. அங்கே நின்று அவள் தோற்றத்தைக் காணச் சகிக்கவில்லை. தன் அறைக்குத் திரும்பினான். சோர்வுடன் பொத்தென்று கட்டிலில் விழுந்தான். தாய் மகனுக்கு உபதேசிப்பது போல, ஞானி பாமரனுக்கு உணர்த்துவது போல அவள் அன்புடன் முன்னாளில் செய்த உபதேச மொழிகளை ஒவ்வொன்றாக நினைவுகூர்ந்தான். அத்தனையையும் விழலுக்கு இறைத்த நீராக்கிவிட்டு மகா மூர்க்கத்தனமாகத் தான் நடந்து கொண்டதை எண்ணிப் பார்த்ததும் அவன் உடலும் உள்ளமும் ஒருங்கே குலுங்கின. தன்னுடைய அந்தக் கொடுஞ் செயலில் ஏற்பட்ட அதிர்ச்சியே நீலாவின் அப்போதைய நிலைக்குக் காரணம் என்று தீர்மானித்தான். அந்த நினைவு அவன் நெஞ்சைக் கொளுத்திற்று. திகு திகுவென்று பற்றி எரிந்த அந்த நெஞ்சிலே இருந்த பழைய நினைவுகள் அனைத்தும் சாம்பலாயின. மனத்தின் ரகளையிலே எழுந்த சூறாவளிக் காற்றிலே அந்தச் சாம்பல் அவ்வளவும் பறந்தே போயிற்று.

சூறாவளி அடங்கிற்று. நெஞ்சுத் தீ அணைந்தது. உள்ளம் நிர்மலமாயிற்று. அவன் நிதானம் பெற்றான். வைத்தியனை அழைக்கச் சென்ற வண்டி திரும்பி வந்ததை அறிந்து, வைத்தியனின் பேச்சுக் குரலைக்கேட்டு அறையை விட்டு வெளியே வந்தான். வைத்தியன் ஏதேதோ கூறி மருந்தைக் கொடுத்தான். மூன்று நாட்கள் ஒரே நிலையில் இருந்தாள் நீலா. சகோதரர்கள்

இருவரும் அரும்பாடு பட்டனர். ஊரார் அடிக்கடி வந்து கவனித்துக்கொண்டனர். நாட்கள் சென்றன. உள்ளூர் வைத்தியனின் மனக் கலக்கம் வெளியூர் டாக்டரை வரவழைத்தது. அவரும் கவலைப்படக் கூடிய முறையிலேயே தகவல் கொடுத்தார். இருந்தும் அவர் மருந்து ஓரளவு பலனைக் கொடுக்கத்தான் செய்தது. நாலாம் நாள் பிற்பகலில் நீலா கண் விழித்தாள். பிரக்ஞையும் சிறுகச் சிறுக வந்தது. அந்த நிலையில் அவள் பார்வையிலே முதல் முதலில் எதிர்ப்பட்டவன் சுகுமாரன் தான். அவன் முகத்தைப் பார்த்தாளோ இல்லையோ, சட்டென்று கண்ணைமூடிக்கொள்ளப் போனாள் அவள். ஆனால் அசைப்பிலே தென்பட்ட அவன் கண் இதழ்களிலே சுடர்விட்ட நீர்த் துளிகள் அவளை அவ்வாறு செய்ய வொட்டாமல் தடுத்தன.

"ம...ன்...னி...!..."

அவள் முகம் ஆச்சரியத்தால் மலர்ந்தது. தன் செவிகளையே அவளால் நம்ப முடியவில்லை. 'பிரமையா?' என்று கேட்டது உள்ளம். 'இது நிஜந்தான!' என்றன கண்கள். அவள் வியப்பையும் கலவரத்தையும் சந்தேகத்தையும் போக்க நினைத்த சுகுமாரன் பேச முடியாமல் திணறிய தன் தொண்டையைச் சீர்திருத்திக்கொண்டு உதடுகள் படபடக்கச் சொன்னான்:

"......மன்னி!......பாவி, என்னால்தான் உனக்கு......"

அவனால் தொடர்ந்து பேச முடியவில்லை.

மறுபடியும், கஷ்டப்பட்டு, "...நான் இனிமேல்..." என்று என்னவோ சொல்ல ஆரம்பித்தான். அப்பொழுதும் அவன் தொண்டை அடைப்பு நீங்கினபாடில்லை. முகத்தை மேல் துண்டால் மறைத்துக்கொண்டு குமுறிக் குமுறி அழுதான்.

அவள் மிகுந்த பிரயாசையுடன், "அ...ழா...தீ...ர்...க...ள்" என்றாள். சட்டென்று அவன் அழுகையை நிறுத்தினான்.

வெளியிலிருந்து வந்த நாராயணன் மனைவியின் தெளிவு கண்டு சந்தோஷங் கொண்டார். தம்பியின் பாச உணர்ச்சி கண்டு உள்ளம் நெகிழ்ந்தார். "நீலா, குழந்தை நாலு நாளாய் என்ன பாடு பட்டான் தெரியுமா?" என்று நீலாவிடம் சொல்லி விட்டுச் சுகுமாரன் பக்கம் திரும்பி, "அழாதே சுகு, இனிமேல் மன்னியைப் பற்றிக் கவலை இல்லை. அவளுடைய இந்த நிலைக்கு ஓரளவு காரணம் உன் கவலைதான். இனியாகிலும் நீ சரிவர நடந்துகொண்டாயானால்..." என்று அவர் கூறி முடிப்பதற்குள் அவன் ஆவேசம் வந்தவன் போலப் பட படவென்று பேசினான்: "அண்ணா, இனி உங்கள் இருவர் மனமும் நோகும்படி ஒரு போதும் நான் நடந்துகொள்ள மாட்டேன்; இது சத்தியம்."—இந்தச் சொற்கள் தம்பதிகளின் உள்ளத்தைக் குளிரச் செய்தன.

# 18. நெஞ்சின் அலைகள்

நாளடைவில் நீலா குணம் பெற்ருள். என்ருலும் உடலில் பூரண சக்தி ஏற்படவில்லை. அந்த நிலை மாற நீண்ட நாட்கள் செல்லும் என்ருர் டாக்டர். சுகுமாரன் அதன் பிறகு, தான் சொன்னபடியே நடந்துகொண்டான். அடிக்கு ஆயிரந் தடவை நீலாவை,"மன்னி, மன்னி" என்று அழைத்துக் களங்கமற்ற சிறு குழந்தை போலப் பேசினுன். முற்றும் புதிய நிலையை அடைந்து விட்ட அவன் போக்கினுல் நீலாவின் உள்ளத்திலே சந்தோஷம் நிறைந்தது. சுருள் தங்கமாக வளைந்து கொடுக்கும் மைத்துனனை மடக்கி வழிப் படுத்த அதுதான் தருணம் என்று எண்ணிய அவள் ஒருநாள் அவனை அழைத்து மிகவும் நிதானமாகக் கேட்டாள்: "உங்களுக்குக் கல்யாணம் நடத்த நானும் அண்ணு வும் திட்ட மிட்டிருக்கிருேம். உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்ருள். அவன் கன அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே "ஜமாய்த்துத் தள்ளுங்கள்" என்ருன்.

"விளையாட்டுப் பேச்சல்ல சுகுமார்."

"விளையாட்டுப் பேச்சு என்று யார் மன்னி சொன்னுர்கள்?"

"பெண்கூடப் பார்த்து நிச்சயம் செய்தாகி விட்டது."

"சந்தோஷம்."

"யார் என்று கேட்கவில்லையே?"

"எதற்காகக் கேட்பது?"

"உங்களுக்கு வாய்க்க இருக்கும் மனைவியைப்பற்றி நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டாமா?"

"அவசியம் இல்லை."

"அப்படிக்கூட உண்டா?"

"என் வரையில் அப்படித்தான். நீங்கள் பார்த்துச் செய்கிற காரியங்களில் பழுது இராது என்று எனக்குத் தெரியும்."

நீலா ஆச்சரியத்தில் மூழ்கிப் போனுள். கடைசி வரையில் சுகுமாரன் அதே உறுதியுடன் நடந்துகொண்டான்.

அந்த ஊர்மணியகாரரின் மருமாள் பவானிக்கும் சுகுமார னுக்கும் விரைவில் திருமணம் நிறைவேறிற்று.

நீலாவின் மனம் பவானி விஷயத்திலே அத்தனை ஈடுபாடு கொண்டதற்குக் காரணம் பவானி சகல அம்சங்களிலும் நீலாவைப் போலவே இருந்ததுதான்.

பவானி புக்ககம் வந்தாள். கணவன், மைத்துனர், ஓர்ப்படி மூவர் மனமும் திருப்தி கொள்ளும் முறையிலே நடந்துகொண் டாள். சுகுமார் சென்னையிலே படித்த காலத்திலே உல்லாச

மாக இருந்தது போலவே இப்பொழுதும் வேடிக்கைப் பேச்சும் விளையாட்டுப் போக்குமாக இருந்தான். அதைக் கண்டு நாராயண சர்மா, நீலா இருவர் உள்ளமும் நிறைவு பெற்றது. ஒரு நல்ல நாளில் ஆடம்பரமின்றி அந்தத் தம்பதிகளுக்குச் சாந்தி முகூர்த்தம் நடத்த ஏற்பாடு செய்தார்கள்.

அன்றிரவு பவானியை வெகு சிரத்தை எடுத்துக்கொண்டு சிங்காரித்துவிட்டாள் நீலா. பெட்டியைத் திறந்து அந்தப் பொன் மலரை எடுத்து அவள் தலையிலே சூட்டினாள். உணர்ச்சிகள் செத்துவிட்ட நீலாவின் உள்ளத்திலே அப்போது திடீரென்று ஏதேதோ உணர்ச்சிகள் தலை நீட்டத்தான் செய்தன. அந்த நிலையைச் சமாளிக்க அவள் பட்ட பாடு கொஞ்சமல்ல.

“இது என்ன மன்னி?”

“தங்க ரோஜா.”

“தங்க...ரோ...ஜா...!...ஏ...து?...

“உன் அகத்துக்காரர் உனக்காகப் பட்டணத்திலிருந்து வரவழைத்தது. உள்ளே பார், அவர் பெயரை!”

பவானியின் உள்ளம் கிளுகிளுத்தது. இதை மறைவிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சுகுமாரனின் உள்ளமோ?

இரவு பதினொரு மணி. அறைக் கதவு சாத்தித் தாளிட்டு இருந்தது. சுகுமாரன் கட்டிலில் அமர்ந்து ஜன்னல் வழியே ஆகாயத்தை நோக்கிக்கொண்டிருந்தான். பவானி பத்து மணியிலிருந்து சுவரோரமாகக் கால் கடுக்க நின்றுகொண்டிருந்தாள். முடிவற்றதாக இருந்த அந் நிலைக்கு ஒரு முடிவைத் தேடும் நோக்கத்துடன் அவள் கூச்சத்தைவிட்டு அவன் முன்னே வந்து நமஸ்கரித்தாள். எழுந்து தலை நிமிர்ந்து பார்த்த போதும் அவன் தன்னை நோக்காமல் முன்போலவே வான வெளியை நோக்கிக் கொண்டிருப்பதைக் கண்டாள். அந் நிலையும் அவன் முகபாவமும் அவள் உள்ளத்திலே சிறு வேதனையை அளித்தது. எனினும் அதைப் பாராட்டாமல் விரைந்து சென்று கூஜாவில் இருந்த பாலை எடுத்து ஆற்றிக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள். அவன் அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே அதை வாங்கிச் சாளரத்துப் பண்டியிலே வைத்தான். ‘சாயங்காலம் வரையிலே கலகலப்பாக, வெகு சந்தோஷத்துடன் இருந்தவருக்குத் திடீரென்று நேர்ந்ததென்ன?’ என்று தன்னுள் கேட்டுக்கொண்டாள் பவானி. மாண்டுபோன நினைவுகளை மூண்டு எழச் செய்த அந்தத் தங்க ரோஜாவின் சரித்திரத்தை அவள் என்ன கண்டாள்? கூடத்து அறையிலே படுத்திருந்த நீலாவின் அப்போதைய நிலைதான் அவளுக்கு என்ன தெரியும்?

# 19. நாத வெள்ளம்

விடிந்தது. பவானி அறையினின்றும் வெளியே வந்தாள். நீலா அவள் முகத்தை நோக்கினாள். உள்ளம் துணுக்குற்றது. "இங்கே வா" என்று அவளை அருகில் அழைத்தாள். தாழ்ந்த குரலில் என்னவோ கேட்டாள். பவானி இரு கைகளாலும் முகத்தை மூடியபடி நீலாவின் மடியிலே பாய்ந்தாள். குரல் வெளியே கேட்கவில்லை. உடல் மட்டும் குலுங்கிற்று. அந்த மௌன ரோதனம் நீலாவின் உள்ளத்தை வாள்கொண்டு அறுத்தது. பவானியை அங்கேயே விடுத்து எழுந்தாள். சக்தி அனைத்தையும் ஒன்று திரட்டிக்கொண்டு சுகுமாரன் இருந்த இடத்தை நோக்கி விரைந்தாள். அவளுடைய வருகையும் தோற்றமும் அவன் உள்ளத்தைக் கலக்கின.

"சுகுமார், நீங்கள் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? மூவர் வாழ்க்கையை உயிர்ப்பிக்கவென்று செய்த காரியத்தின் மூலம் நால்வர் வாழ்க்கையை நாசம் செய்யத் துணிந்தீர்களா? ஒரு பாவமும் அறியாத அந்தப் பேதையின் வயிற்றெரிச்சலை ஏன் கொட்டிக்கொள்கிறீர்கள்? இது கொஞ்சமும் சரியில்லை. யமன் கையில் சிக்கிய என் உயிர் உங்கள் தெளிவான போக்கினால் மீண்டது. அப்படி மீண்ட உயிர் மறுபடிம் யமன் வசமாக எத்தனை நேரம் செல்லும் என்று எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள்? இது உங்களுக்குக் கொஞ்சமும் தகாது."—

படபடவென்று பேசியதால் அவள் சக்தி பறிபோய் விட்டது. சோர்ந்துபோய் அங்கே இருந்த நாற்காலியிலே சாய்ந்துவிட்டாள். திணறித் திக்குமுக்காடியபடி நின்றிருந்த சுகுமாரன் அவள் நிலை கண்டு பயந்து போய்விட்டான். சட்டென்று, "மன்னி, மன்னி!" என்று நடுங்கும் குரலில் கூப்பிட்டான். அவள் பிரயாசையுடன் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். "என்னை மன்னித்துவிடு மன்னி. இனி உங்கள் மனம் புண்ணாகும்படி நடந்துகொள்ளமாட்டேன்" என்று இறைஞ்சிய குரலில் வேண்டினான். "எங்கே, பார்க்கலாம்" என்று சொல்லிக்கொண்டே மெல்ல எழுந்து சென்றாள் அவள்.

"என்ன?" என்று கேட்டுக்கொண்டே எதிரே வந்தார். நாராயணன். நீலா சிரித்துக்கொண்டே, "ஒன்றும் இல்லை, குழந்தைகள் விளையாட்டுச் சண்டை போட்டுக்கொள்கின்றன" என்றாள். நாராயணனும் பதிலுக்குச் சிரித்துக்கொண்டே, "இது சகஜந்தானே?" என்றார்.

சுகுமாரன் வெட்கமுற்றவன் போல அவர்கள் இருந்த இடத்தை வேகமாகத் தாண்டிக்கொண்டு தோட்டத்துப் பக்கம் சென்றான்.

அன்றிரவு. நீலா பவானிக்கு முதல் நாளைவிடச் சிறப்பாக அலங்காரம் செய்துவிட்டாள். நாராயண சர்மா, சுகுமாரன், பவானி மூவர் இருதயமும் நீலாவின் அன்பையும் போக்கையுங் கண்டு வியந்தது.

இரவு பதினொரு மணி. திடீரென்று வீணையின் ஒலி கேட்டுக் கண் விழித்தார் நாராயண சர்மா. அறையில் இருந்த சுகுமாரனும் பவானியும் அதிசயமுற்றனர். அலை அலையாக வீணையினின்று எழுந்த நாத வெள்ளம் அனைவர் உள்ளத்தையும் பரவசமுறச் செய்தது. 'இத்தனை துர்ப்பலமான நிலையிலே இவ்வளவு பிரமாதமாக வாசிக்க இவளால் எப்படி முடிகிறது!' என்று ஒவ்வொருவரும் வியந்து கொண்டனர். அவள் தன்னை மறந்த நிலையிலே மும்முரமாக வாசித்துக்கொண்டிருந்தாள். அந்த நேரத்திற்கு அந்த ராகம் எத்தனை பொருத்தமாக இருந்தது! ஆம். அவள் அப்போது வாசித்தது நீலாம்பரி தான்.

"போதும் நீலா. உடம்புக்கு ஆகாது. வைத்துவிட்டுப் படுத்துக்கொள்."

'இப்படி ஒரு தடவையா சொன்னார் நாராயணன்? எத்தனையோ தடவைகள். ஆனல் அவள் செவிகளில் அவர் சொன்னது ஏறவேயில்லை. கடைசியில் என்ன ஆயிற்று?

நேரம் செல்லச் செல்ல நாராயணனுக்குத் தூக்கம் கண்ணைப் பொத்த ஆரம்பித்தது; தூங்கிப் போனார். இன்பப் போரில் களைத்துப்போன தம்பதிகளும் அயர்ந்த நித்திரையிலே ஆழ்ந்து போனார்கள். அனைவரையும் மயக்கி நித்திரை வசப் படுத்திய அந்த இன்னிசைக்குத்தான் எத்தனை மோகன சக்தி!

மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்று நீலாவுக்குத் தெரியாது. அவள் எப்போது வீணை வாசிப்பதை நிறுத்தினாள் என்பதும் மற்றவர்களுக்குத் தெரியாது. அப்படித் தன்னை மறந்து இசையிலே கலந்துவிட்ட அவளை, காலையில் வீணையை அணைந்தவாறு அதன்மீது சாய்ந்து கிடந்த கோலத்திலேதான் எல்லோரும் கண்டார்கள்.

முற்றும்

## எல்லார்வி எழுதியவை

**நவநீதம் :** **1 8 0**

"ஓர் ஏழைப் பெண். நல்ல அழகி. அநாதை. என்றாலும் அவள் எவ்வாறு இந்த உலகத்தில் அழகிய அநாதைப் பெண்களுக்கு ஏற்படக்கூடிய பலவகையான கஷ்டங்களிலிருந்தும் முருகபக்தியின் காரணமாகப் பெரிய சங்கீத விதுஷியாகிச் சங்கீதத் தொண்டு செய்தாள் என்பதையும், அவள் தாய் பட்ட கஷ்டம் முதலியவைகளையும் பற்றி விளக்கும் நாவல் இது. சரளமான இனிய நடையில் அமைந்தது."

—கலைமகள், ஏப்ரல் 52.

**ஆசை முகம் :** கிளேஸ் பதிப்பு **0 12 0**
மலிவுப் பதிப்பு **0 8 0**

"எல்லார்வி எழுதிய ஐந்து சிறுகதைகள் ஆசை முகம் என்ற பெயருடன் வெளிவந்திருக்கின்றன. இந்தச் சிறுகதைகளின் மூலம் ஆசிரியருடைய பேனாவின் ஆற்றலை அறிய முடிகிறது. இத் தொகுதியில் வரும் 'வெள்ளைப் பசு' என்ற கதை எங்கள் உணர்ச்சி அலைகளை எழுப்பி எங்கள் கலைப் பசியை ஆற்றிவிடுகிறது. 'தெளிவு' என்ற கதையும் எல்லாவகையிலும் சிறுகதை இலக்கணத்துக்கு அமைந்து மனோரஞ்சிதமாய் இருக்கிறது." —ஈழகேசரி, 10–6–51.

**புஷ்ப பாணம் :** **0 8 0**

"ஸ்ரீநிவாஸனும் வஸந்தாவும் இரண்டு ஐக்கியக் குடும்பங்களிலே மலர்ந்த மலர்கள்-காதலர்கள். ஒன்றிப் பழகின இரு குடும்பங்களும், நாளாவர்த்தியில் காலப் புயல் கண்டு பிரிந்தன. காதலர் உள்ளங்களில் இந்தப் போக்கு கலக்கத்தை மூட்டினாலும், அவர்கள் உறுதி தளரவில்லை. இறுதியில் நிலைமை தெளிவுபடவும் அவர்கள் லட்சியமும் நிறைவேறி இருவரும் மணந்துகொள்கின்றனர். தமிழ் நாட்டுக் குடும்பப் பண்பாடுகளையும், நவ உலக இளைஞரின் மன நிலையையும் ஆசிரியர் நன்கு சித்திரித்துள்ளார். தெளிந்த நடையில் அமைந்துள்ள இச் சிறு நாவல் சுவாரஸ்யம் அளிக்கும் பொழுதுபோக்கு நாவல் என்பதில் சந்தேகம் இல்லை."

—தினமணிக் கதிர், 13-1-52.

**அமுத நிலையம் லிமிடெட்**

தேனாம்பேட்டை : சென்னை—18

WRAPPER PRINTED AT ONAL ART PRESS, MADRAS-18